ॐ

पुष्पदन्तकृतं

# || शिवमहिम्नस्तोत्रम् ||

# புஷ்பதந்தர் சிவ மஹிம்ன ஸ்தோத்திரம்

இஞ்சிக்கொல்லை சாஸ்திர ரத்னாகர
**ஜகதீச்வர சாஸ்திரி**களின், அனுவாதத்துடன் கூடியது

**ஸ்ரீ காமகோடி ப்ரதீபம்**
ஸ்ரீ காமகோடி கோசஸ்தானம்
பிரான்ஸிஸ் ஜோஸப்புத் தெரு,
சென்னை

ॐ

**पुष्पदन्तकृतं**

# || शिवमहिम्नस्तोत्रम् ||

# புஷ்பதந்தர் சிவ மஹிம்ன ஸ்தோத்திரம்

**महिम्नः पारं ते परमविदुषो यद्यसदृशी**
**स्तुतिब्रह्मादीनामपि तदवसन्नास्त्वयि गिरः ।**
**अथावाच्यः सर्वः स्वमतिपरिणामावधि गृणन्**
**ममाप्येष स्तोत्रे हर निरपवादः परिकरः ॥१ ॥**

**மஹிம்ன: பாரம் தே பரமவித$^{3}$ஷோ யத்$^{3}$யஸத்$^{3}$ருஶீ**
**ஸ்துதிர்ப்$^{3}$ரும்மாதீ$^{3}$னாமபி தத$^{3}$வஸன்னாஸ்தவயி கி$^{3}$ர: |**
**அதா$^{2}$வாச்ய: ஸர்வ: ஸ்வமதி பரிணாமாவதி$^{4}$ க்$^{3}$ருணன்**
**மமாப்யேஷ ஸ்தோத்ரே ஹர நிரபவாத$^{3}$: பரிகர: || 1 ||**

**அவதாரிகை:** - புஷ்பதந்தாசார்யர் என்பவர் ஒரு கந்தர்வ ராஜன். அவர் ஒரு அரசனுடைய நந்தவன புஷ்பங்கள் தினந்தோறும் அபஹரித்துக்கொண்டிருந்தார். அவரைக் கண்டுபிடிப்பதற்காக அவ்வரசன் "சிவநிர்மால்யத்தைத் தாண்டினால் அந்தப் புஷ்பத் திருடனுக்கு அந்தர்த்தான சக்தி நசித்துவிடு" மெனக் கருதி வழியில் சிவநிர்மாலயத்தைப் போட்டு விட்டான். அதை அறிந்து கொள்ளலாமல் கந்தர்வ ராஜன் புஷ்பங்களை அபஹரிக்க வழக்கம் போல் நந்தவனத்தில் நுழையவே, அந்தர்த்தானாதி எல்லாச் சக்தியையும் இழந்துவிட்டான். பிறகு ஏகாக்ரத்யானத்தால் அவன் "சிவநிர்மால்யத்தைத் தாண்டினதால் தான் நமக்கு இவ்வித ஸ்திதி ஏற்பட்டதெ"ன்று உணர்ந்து, கருணைக் கடலாயும், கருதிய பொருளை அளிப்பவரா யுமுள்ள அப்பரமசிவனையே ஸ்தோத்ரம் செய்தான். அந்த ஸ்தோத்ரமே இது வாகும்.

குணங்களை வர்ணிப்பதே ஸ்தோத்ரமெனப்படும். குணங்களை வர்ணிப்பதற் குக் குணங்களின் ஞானம் அவச்யம் வேண்டும். குணங்களை அறியாமல் அவற்றை வர்ணிக்க முடியாது. எனவே, பரமேச்வாரின் குணங்கள் அனந்தங்களானதால் அவற்றை அறிந்து கொள்ளவும் இயலாது. ஆகவே பரமேச்வர குணங்களை வர்ணிக்கிறதான ஸ்தோத்ரம் அனுரூபமாகாது. அனுரூபமில்லாமல் ஸ்தோத்ரம் செய்தால் அது நகைப்பிற்கிடமாகுமென்ற சங்கைக்கு ஸமாதானம் கூறும் வாயிலாகத் தனது விநயாதி குணங்களைக் காண்பித்துக் கொண்டு பரமேச்வரனைத் துதிக்க ஆரம்பிக்கிறார்.

**பதவுரை:** - **ஹர** = ஓ பரமேச்வரவே!; **தே** = உனது; **மஹிம்ந:** = மஹத்வத்தின்; **பரம்** = சிரேஷ்டமான, அன்யமான; **பாரம்** = எல்லையை, கரையை; **அவிது³ஷோ** = அறியாதவனுடைய; **ஸ்துதி:** = ஸ்தோத்ரமானது; **அஸத்³ருஸீ** = அனுரூபமில்லாதது, அயோக்யமானது; **யத்³** = என்றால்; **தத்³** = அங்ஙனமாயின்; **ப்³ரும்மாதீ³னாமபி** = பிருஹ்மா முதலிய தேவர்களுடைய; **த்வயி** = உன்னைப் பற்றிய; **கி³ர:** = ஸ்தோத்ர வசனங்களும்; **அவஸன்னா:** = அனுரூபமில்லாதவையே, அயோக்யமானவையேயாகும்; **அத²** = அல்லது; **ஸ்வமதி பரிணாமாவதி** = தன் புத்தி சக்தியை அனுஸ்ரித்து, **க்³ருணன்** = ஸ்தோத்ரம் செய்கின்ற; **ஸர்வ:** = அனைவரும்; **அவாச்ய:** = தோஷமற்றவர் என்றால்; **ஸ்தோத்ரே** = (உன்) ஸ்தோத்ர விஷயத்தில்; **மம** = எனது; **ஏஷ:** = இந்த; **பரிகர: அபி** = ஆரம்பமும், பிரயத்தனமும்; **நிரபவாத³:** = தடுக்கத்தக்கதல்ல; தோஷமுடையதல்ல.

**பொருள்:** - ஓ பரமேச்வர! உன் மஹிமையின் எல்லையை உணராமல் உன்னைத்துதிப்பது அயோக்யமானதாகுமெனில் ப்ருஹ்மாதி தேவர்களுடைய நின் ஸ்திதி வசனமும் அவ்விதம் அயோக்யமான தென்றே ஸித்திக்கும், அவர்களும் உன் மஹிமையின் எல்லையை உணராதவர்களன்றோ? அவர்வர் அவர்வர் புத்தி சக்திக்குத் தகுந்தபடி உன் மஹிமையை கொஞ்சமாவது அறிந்து உன்னைத் துதித்தால், குற்றமொன்றுமில்லை எனக் கருதுவீராயின் உன் ஸ்துதி விஷயத்தில் நான் எடுத்துக்கொண்டுள்ள முயற்சியிலும் குற்றமொன்றுமிருக்காதென்பது நிச்சயம்.

**கருத்து:** - இங்கு **ஹர** என்ற விளி வேற்றுமைப் பதத்திற்கு ஏழை ஜனங்களின் எல்லாத் துக்கங்களையும் நீக்குபவர் என்று அர்த்தம். எல்லோருடைய துக்கங்களை நீக்குபவராக நீர் பிரஸித்தராயிருப்பதால், எனது துக்கங்களைப் போக்க உமக்கு வேறு பிரயத்தனம் அவச்யமில்லை என்று இதன் கருத்து. ஈச்வரன் மஹிமை இவ்வளவென்று அறியாதவன் அவ்வீச்வரனைத் துதிக்க அரஹதை யற்றவனாயின். ப்ருஹ்மாதி தேவர்களும் அர்ஹதையற்றவரேயாவர். அவர்கள் ஸர்வஜ்ஞர்களாயிருந்த போதிலும், ஈச்வர மஹிமையனைத்தையும் உணர்ந்தவர் களல்ல. இதனால் பருஹ்மாதி தேவர்களுக்கு ஸர்வஜஞத்வம் பங்கத்தை யடையாது. ஏனெனின், அறியத் தகுந்த ஸத்வஸ்துவை எல்லாமறிவதே ஸர்வ ஜ்ஞத்வமாகுமேயன்றி. அறியத் தகாத இல்லாத வஸ்துவை அறிவது ஸர்வ ஜ்ஞத்வமாகாது.. இல்லாத வஸ்துவை அறிவதும் ஸர்வஜ்ஞத்வம்தானென்று சொன்னால் ஸர்வஜ்ஞத்வம் பரமஞானரூபமாய் முடியும். இல்லாத வஸ்துவை இருப்பதாக உணர்வதே ப்ரமஞான மென்று சொல்வது எனவே ஈச்வர மஹிமைக்கு எல்லை இல்லையாதலால் அதை ப்ருஹ்மாதி தேவர்கள் அறியவில்லை. இதனால் ஸர்வஜ்ஞத்வம் பங்கத்தையடையாது. ஈச்வர மஹிமையின் எல்லையை ஒருவராலும் அறிய முடியாதென்பதை ஸ்ரீமத் பாகவதமும்

**विष्णोर्नु वीर्यगणनां कतमोऽहतीह ।**
**यः पार्थिवान्यपि कविर्विममे रजांसि ॥**

**விஷ்ணோர்னு வீர்யகணனாம் கதமோர்ஹதீஹ ।**
**ய: பார்த்திவான்யபி கவிர்விமமே ரஜாம்ஸி ॥**

என்று கூறுகிறது.

ஈச்வர மஹிமை யனைத்தையும் அறியாமற்போனாலும் அவரவர் புத்திக்கு எட்டியவரையில் அவ்வீச்வர ம்ஹிமையை அறிந்து, தம், தம்வாக் சுத்திக்காக அவ்வீச்வரனைத் துதிப்பது குற்ற மற்றதாகும். ப்ருஹ்மாதி தேவர்களும் அவரவர் புத்திக்கெட்டிய வரையில் ஈச்வர மஹிமையை அறிந்துதான் அவரைத் துதிக்கிறார்கள். இங்ஙனமிருக்கையில் என் புத்திக்கெட்டிய வரையில் ஈச்வர மஹிமையை யறிந்து. நானும் அவ்வீச்வரனைத் துதி செய்வதில் தோஷமொன்றுமில்லை. ஈச்வரனைத் துதிப்பதற்காகவே வாகிந்திரியம் இருக்கிறது என்ற விஷயம்.

**सा वाग्यया तस्य गुणान् गृणीते करौ तत्कर्मकरौ वरौ च ।**
**जिह्वा सती दर्दुरिकेव सूत न चोपगायत्युरुगायगाथाः ।**

**ஸாவாக் யயா தஸ்யகுணான் க்ருணீதே கரௌ ச தக்கர்மகரௌ வரௌச ।**
**ஜிஹ்வா ஸதீ தர்துரிகேவ ஸூத ந சோபகாயத் யுருகாயகாதா: ॥**

என்று ஸ்ரீமத் பாகவதத்தில் வர்ணிக்கப்பட்டுள்ளது. இங்கு பூர்வார்த்தத்தால் ஈச்வரனைத் துதிக்க ஒருவருக்கும் அரிஹதை இல்லை என்று சொல்வதன் மூலமாக, எவராலும் அறிய முடியாத மஹா மஹிமையுள்ளவர் ஈச்வரனென்று துதிக்கப்பட்டிருக்கிறது. உத்தரார்த்தால், ஸமாதானம் கூறுவது மூலமாக, ஈச்வரன் விஷயத்தில் எல்லோருடைய ஸ்தோத்ரமும் ஒரே மாதிரிதான். அதில் ஏற்றத் தாழ்வுகள் இல்லை என்று நிரூபிக்கப்பட்டுள்ளது.

**अतीतः पन्थानं तव च महिमा वामनसयो**
**रतम्यावृत्त्या यं चकितमभिधत्ते श्रुतिरपि ।**
**स कस्य स्तोतध्यः कतिविधगुणः कस्य विषया**
**पदे त्वर्वाचीने पतति न मनः कस्य न वचः ॥ २ ॥**

**அதீத: பந்தா²னம் தவ ச மஹிமா வாங்மனஸயோ:**
**அதத்³வ்யாவ்ருத்யா யம் சகிதமபி⁴த⁴த்தே ஶ்ருதிரபி ।**
**ஸ கஸ்ய ஸ்தோதவ்ய: கதிவித⁴கு³ண: கஸ்ய விஷய:**
**பதே³ த்வர்வாசீனே பததி ந மன: கஸ்ய ந வச: ॥ 2 ॥**

**அவதாரிகை:** - இந்த சுலோகத்தால் இதற்கு முன் சுலோகத்தில் கூறிய ப்ருஹ்மாதி தேவர்களின் ஸாம்யத்தைப் பிரதிபாதனம் பண்ணிக்கொண்டு பகவானை ஸ்துதிக்க முடியாதென்பதாகக் கூறி ஸ்துதி பண்ணுகிறார்.

**பதவுரை: - ஹர**! = பரமசிவனே; **யம் =** ஸகுண நிர்குண ஸ்வரூபியான எவனை; **ஶ்ருதி: அபி** = வேதமும்; **சகிதம் =** பயந்து; **அதத்த்3வ்யாவ்ருத்யா** = ஸர்வப் பிரபஞ்சாபேதமாய், ஸர்வப் பிரபஞ்சபின்னமாய், **அபி4த4த்தே** = சொல்லுகின்றதோ; **தவ** = அத்தகைய உனது; **மஹிமா** = மஹிமை; **வாங்மனஸயோ: = வாக்குக்கும்** மனதிற்கும்; **அதீத:** = எட்டாததே; **கஸ்ய =** எதரால்; **ஸ்தோதவ்ய: கதிவித4கு3ண:** = அநந்தகுணங்களுள்ளதும், **கஸ்ய விஷய:** = ஒன்றாலும் அறிய முடியாதுமான; **ஸ: =** அந்த ஸகுண நிர்குண மஹிமை; **கஸ்ய** = எவரால்; **ஸ்தோதவ்ய:** = ஸ்தோத்திரம் செய்ய முடியும்?; **அவாசீனே** = நவீனமான; **பதே3 து** = மூர்த்தியிலோவெனின்; **கஸ்ய =** எவனது; **மன:** = மனது; **ந பதிதி** = பிரவேசிக்காது?; **கஸ்ய =** எவனது; **வச:** = ஸ்தோத்திர வசனமும்; **ந(பததி)** = பிரவேசிக்காது?

**கருத்துரை: -** பரமேச்வரன் ஸகுணமாயும் நிர்குணமாயிமிருகிறார். இவ்விரு விதமான அவ்வீச்வர ஸ்வரூபத்தைப் பிரத்தியக்ஷாநுமானாதி பிரமாணங்களால் அறிய முடியாது. வேதாந்த வாக்யங்களால் தான் அறிய முடியும். **தம் தவைத நிஷத3ம் புருஷம் ப்ருச்சாமி** என்ற சுருதி இவ்விதம் கூறுகிறது. நித்யா பௌருஷேயங்களான வேதாந்தங்களும் ஸகுண ஸ்வரூபத்தையும், நிர்க்குண ஸ்வரூபத்தையும் பயத்துடன் பிரதிபாதிக்கின்றன. ஸகுண் பக்ஷத்தில் குணங்களைக் கூறுவதில் குற்றமொன்றும் சேராமலிருக்க வேண்டுமே என்று பயம். நிர்க்குண பக்ஷத்தில் நிர்க்குணம் ஸ்வயம் பிரகாச வஸ்துவானதால் அதைத் தெரிவித்தால் ஸ்வயம் பிரகாசத்வம் போய்ப் பராதீனப் பிரகாசத்வம் நேர்ந்துவிடுமோவென்று வேதாந்தங்களுக்கு பயம். அதற்காக **ஸர்வம் கலிதம் ப்ரமஹ ஸர்வகாமி ஸர்வகாம:** என்ற வாக்கியங்களால் வேதாந்தங்களில் ஸர்வப் பிரபஞ்சரூபமாய் ஸகுணம் கூறப்பட்டிருக்கிறது. பிரத்தியக் ரூபமாய்க் கூறப்படவில்லை. நிர்க்குணத்தை அவித்யை, அதன் கார்யமான பிரபஞ்சம் இவ்விரு உபாதிகளை விலக்கி லக்ஷணையால் வேதாந்தங்கள் கூறுகின்றன. மாகோபாதியுடன் கூடின பிருஹ்ம சைதன்யத்தையும் அவித்யோ பாதியுடன் கூடின ஜீவசைதன்யத்தையும் உபாதியை நீக்க அகண்ட ஸ்வப்ரகாச சைதன்யந்தை அகண்டாகார மனோவிருத்திக்கு விஷயமாகச் செய்கின்றன. ஆகையால் ஸகுண வஸ்துவோ, நிர்க்குண வஸ்துவோ, இவ்விரு வஸ்துக்களின் மஹிமையோ, வாக்குக்கும், மனதிற்கும் எட்டாமல் இருக்கின்றன. ஸகுணத்தில் மஹிமை எல்லை யற்றிருப்பதாலும் நிர்க்குணத்தில் தர்மங்களொன்றுமில்லாமலிருப்பதாலும், ஸகுண நிர்க்குணங்களிரண்டும் வாக்கு மனங்களுக் கெட்டாதது. **யதோவாச்சே நிர்வந்தே । அப்ராப்ய மனஸா ஸஹ ।** என்ற சுருதி இவ்விதம் தெரிவிக்கின்றது. எனவே, அளவற்ற மஹிமை பொருந்திய ஸகுணச்வரனையோ, அல்லது தர்மங்களில்லாததும் ஞான விஷய மற்றதுமான நிர்க்குண பரமாத்மாவையோ எவராலும் துதிக்கவே முடியாது. ஆனால் பக்தர்களை அனுக்ரஹம் பண்ணுவதற்காக ஸங்கல்ப மாத்திரத்தால் ஸ்வீகரித்துக் கொள்ளப்பட்ட மூர்த்தி விசேஷத்தை எவரும் துதிக்காமலிருக்க முடியாது. அம்மூர்த்தியானது, கைல ஸத்தில் மான், மழு, பினாகமென்ற வில், விருஷபம் பார்வதீ, இவைகளுடன் கூடினதாயிருந்தாலும் சரி, வைகுண்டத்தில் சங்கு சக்கரம் கதை லக்ஷ்மீ

இவைகளுடன் கூடினதாயிருந்தாலும் சரி, ப்ரு தாவனத்தில் வேணு நாதம் செய்துகொண்டு விளையாடி வரும் நீலமேகம் போன்ற திருமேனியுடன் கூடிய கிருஷ்ண மூர்த்தி யாயிருந்தாலும் சரி, அந்த மூர்த்தியைத்தான் அனைவரும் துதிக்க் முடியும் இத்தகைய மூர்த்தியை தம்தம் புத்தி சக்திக்குத் தகுந்தவாறு ஸ்தோத்திரம் செய்யும் விஷயத்தில் ஹிரண்யகர்ப்பருக்கும் நமக்கு சிறிதும் பேதமில்லை என்பது தாதபர்யமாம்.

**मधुस्फीता वाचा परमममृतं निर्मितवत**
**स्तव ब्रह्मन्कि वागपि सुरगुरोविस्मयपदम् ।**
**मम त्वेतां वाणी गुणकथनपुण्येन भवतः**
**पुनामीत्यर्थेऽस्मिन् पुरमथन बुद्धिर्व्यवसिता ॥ ३ ॥**

**மது4ஸ்பீதா வாச: பரமமம்ருதம் நிர்மிதவத:**
**தவ ப்3ரும்மன் கிம் வாக3பி ஸூரகு3ரோர் விஸ்மயபத3ம் ।**
**மம தவேதாம் வாணீம் கு3ணகத2னபுண்யேன ப4வத:**
**புனாமீத்யர்த்தே2(அ)ஸ்மின் புரமத2ன பு3த்3தி4ரவ்யவஸிதா ॥ 3 ॥**

**அவதாரிகை:** - இவ்விதம் ஸர்வஜ்ஞர்களான சிவவிஷ்ணுக்களை அவரவர் புத்தி சக்திக் கெட்டிய வரையில் ஸ்துதி செய்யலா மென்ற விஷயம் ஸித்தித்த போதிலும், இந்த நவீன ஸ்தோத்திரத்தால் அவர்களுடைய மனதிற்கு ஸந்தோஷம் ஏற்படுவது நிச்சயமில்லை. அவர்களுக்கு ஸந்தோஷ மேற்படாத பக்ஷத்தில், அவர் களுடைய அனுக்ரஹமும், அதனால் அபீஷ்ட ஸித்தியும் ஏற்பட மாட்டாது. எனவே பரமேச்வரனை ஸ்தோத்திரம் செய்வது நிஷ்பிரயோஜனமேயாகும் என்று சங்கித்து இதில் பரமேச்வர ஸ்தோத்திரத்திற்கு பிரயோஜனத்தை வர்ணிக்கிறார்.

**பதவுரை:** - **ப்3ரும்மன்** = பிருஹ்மஸ்வரூபனே!; **புரமத2ன** = முப்புரமெரித்தவனே!; **மது4ஸ்பீ2தா:** = தேன்போல் இனிமையாய் விளங்கும் சப்தமாதுர்ய குணமுள்ளவையாயும்; **பரமம்** = மேலான; **அம்ருதம்** = அமிருதம் போன்றவையாயும் உள்ள; **வாச: =** வேதவாசகங்கள்; **நிர்மிதவத:** = இயற்றிய; **தவ** = உமக்கு; **ஸூரகு3ரோர்: =** பிருஹஸ்பதியினுடைய, பிருஹ்ம தேவருடைய; **வாக் அபி =** ஸ்தோத்திர வசனமும்; **விஸ்மயபத3ம்** = ஆச்சரியகரமாகுமாவென்ன!; **து** = ஆனால்; **மம** = என்னுடைய; **த்வேதாம்** = இந்த; **வாணீம்** = வசனத்தை; **பவத =** உமது; **குணகதனபுண்யேன** = மங்கள குணங்களை வர்ணிக்கும் புண்ணியத்தால்; **புனாமீ =** சுத்தம் செய்து கொள்ளுகிறேன்; **இத்** = என்ற கருத்தால்; **அஸ்மின் =** இந்த; **அர்த்தே2 =** ஸ்தோத்திர விஷயத்தில்; **பு3த்3தி4ர்: =** (எனது) புத்தி; **வ்யவஸிதா** = முயற்சியுள்ள தாயிற்று.

**கருத்துரை:** - ஓ பரமேச்வரனே? சப்தத்திலும், அர்த்தத்திலும் தேன் போல் அதி மதுரங்களான அனந்த வேதங்களை மூச்சு விடுவது போல் அனாயாஸமாய் ஆவிர்ப்ப விக்கும்படி செய்த, ஸர்வஜ்ஞனான உமக்கு, ஹிரண்யகர்ப்பர்.

பிருஹஸ்பதி இவர்களின் ஸ்தோத்திர வசனத்திலும் ஆச்சரிய புத்தி ஏற்படுவதில்லையெனின் எனது ஸ்தோத்திர வசனத்தில் ஆச்சரிய புத்தி ஏற்படா தென்பதில் ஸம்சயமில்லை. எனவே, எனது ஸ்துதி ஸாமர்த்தியத்தால் உம்மைத் திருப்தி செய்து வைக்க வேண்டி என் புத்தி இந்த ஸ்தோத்திரத்தில் பிரவேசிக்கவில்லை. பின் என்னையோவெனின்? உமது ஆனந்த கல்யாண குணங்களை இந்த ஸ்தோத்திரத்தில் எடுத்துக் கூறும் புண்ய விசேஷத்தால் எனது வாக்கை நிர்மலமாய் செய்து கொள்ள வேண்டுமென்ற கருத்தாலேயே என் புத்தி உமது ஸ்துதியில் முயற்சி எடுத்துக் கொண்டுள்ளது. மனது நிர்மலமாயிருந்தால் தான் வாக்கு நிர்மலமாகும். ஆகையால் இவ்விரண்டையும் நிர்மலமாய்ச் செய்து கொள்வதே இந்த ஸ்தோத்திரத்திற்குப் பிரயோஜனம் பரமேச்வரனுடைய ஸந்தோஷம் இதற்குப் பிரயோஜனமாகாது.

**तवैश्वर्य यचजगदुदयरक्षाप्रलयक**
**त्रयीवस्तु व्यस्त तिसृषु गुणमिनासु तनुषु ।**
**अभव्यानामस्मिन्वरद रमणीयामरमणीं**
**बिहन्तुं व्याक्रोशी विदधत इहैके जडधियः ॥४ ॥**

**தவைஶ்வர்யம் யத்தஜ்ஜக$^{3}$து$^{3}$த$^{3}$யரக்ஷாப்ரளயக்ருத்**
**த்ரயீவஸ்து வ்யஸ்தம் திஸ்ருஷு கு$^{3}$ணபி$^{4}$ன்னாஸு தனஷு ।**
**அப$^{4}$வ்யானாமஸ்மின் வரத$^{3}$ ரமணீயாமரமணீம்**
**விஹந்தும் வியாக்ரோஶீம் வித$^{3}$த$^{4}$த இஹைகே ஜட$^{3}$தி$^{4}$ய: ॥ 4 ॥**

**அவதாரிகை:** - இது காறும் பரமேச்வரன் ஸ்துதி செய்யத்தக்கவரென்றும், அவரது ஸ்துதிக்குப் பிரயோஜனமுண்டென்றும் நிரூபித்துவிட்டு, இப்போது அவ்வீச்வரனொருவன் உண்டென்பதில் வழக்கிடும் பாபிகளான சிலரை கண்டிக்கும் வழியால் ஸ்துதி செய்கின்றார்.

**பதவுரை:** - **வரத**! = விரும்பியவரன் அருளுபவரே?; **இஹ** = இப்புவியில்; **இகே** = சில; **ஜட$^{3}$தி$^{4}$ய:** = மந்தபுத்திகளான பாபிகள்; **குணபின்னாஸு** = ஸத்வரஜஸ்தமோ குணங்களால் வேறுபட்டுள்ள; **திஸ்ருஷு** = மூன்று; **தனுஷு** = சரீரங்களில்; **வ்யஸ்தம்** = விஸ்தாரமாயுள்ளதும்; **ஜக$^{3}$து$^{3}$த$^{3}$யரக்ஷாப்ரளயக்ருத்** = பிரபஞ்சத்தின் உற்பத்தி, ரக்ஷணம், பிரளயம் இவைகளைச் செய்வதாயும்; **த்ரயீவஸ்து** = மூன்று வேதங்களால் பிரதிபாதிக்கப்படும் பொருளாயும்; **யது** = பிரஸித்தமாயுமுள்ள; **தவ்** = உமது; **வைச்வர்யம்** = ஐச்வர்யமுண்டோ; **தது** = அவ்வைச்வர்யத்தை; **விஹந்தும்** = நாசம் செய்வதற்கு; **அஸ்மின்** = இவ்வுலகில்; **அபவ்யானா** = மங்களமில்லாத பாபிகளுக்கு; **ரமணீயா** = மனோஹரமாயும்; **அரமணீம்** = (உண்மையில்) மனோஹரமில்லாததாயுமுள்ள; **வ்யாக்ரோசீம்** = பெருங் கூக்குறல் வினாவை; **விததத** = செய்கின்றனர்.

**கருத்துரை:** - ஓ பரமேச்வரனே! உமது ஐச்வர்யத்தை கண்டனம் பண்ணுவதற்காகச் சில மந்த புத்தியுள்ள பாபிகள் கூக்குரலிடுகின்றனர். உமது ஐச்வர்யம் பிரத்தியக்ஷானுமான சப்தப் பிரமாணங்களால் பிரஸித்தமாயிருக்கிறது. எல்லாப் பிரமாணங்களாலும் பிரஸித்தமாயுள்ள ஐச்வர்யத்தை இல்லை என மறுப்பதற்காக ஒருவர் கூக்குரல் போட்டால் மற்றவரும் அதையனுஸரித்து கூக்குரலிட ஆரம்பிக்கிறார்கள். இவ்விதம் நான் முன்பு, நான் முன்பு என்ற பிரகாரம் பாபிகள் உமது ஐச்வர்யத்தை இல்லை என கண்டனம் பண்ண கூக்குரலிடுவதால், உமது ஐச்வர்யத்துக்கு யாதொரு ஹாநியும் விளைவிக்க முடியாது. ஆனால் அப் பாபிகளுக்குத்தான் அதோ கதி ஏற்படும். ஈச்வரனும், ஐச்வர்யமும் இல்லையென கூக்குரல் போட்டு ஆக்ஷேபம் புரிவது உண்மையில் நற்புத்தியுள்ள மஹான்களுக்கு வெறுக்கத் தக்கதாயிருந்தாலும், துர்ப்புத்தியுடைய துஷ்ட பாபிகளுக்குப் பாபத்தின் முதிர்வால் விரும்பத் தக்கதாய்த் தோன்றுகின்றது. **ஜக[3]து[3]த்[3]யரக்ஷாப்ரளயக்ருத்** - என்ற விசேஷணத்தால் அனுமானப் பிரமாணத்தையும், **கு[3]ணமினாஸு திஸஷு தனுஷு வ்யஸ்தம்** - என்ற விசேஷணத்தால் பிரத்தியக்ஷப் பிரமாணத்தையும், **த்ரயீவஸ்து** - என்ற விசேஷணத்தால் ஆகமப் பிரமாணத்தையும் கூறியிருப்பதாக அறிந்து கொள்ளவும், பிரபஞ்சத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதிஸம்ஹாரதிகளைச் செய்வதாயும், மும்மூர்த்தி வடிவமாய் பிரகாசிப்பதாயும், சுருதி ஸ்மிருதி புராணாகமாதிகளில் வர்ணிக்கப் பட்டுள்ளதுமான ஐச்வர்யத்தை இல்லை என மறுப்பது பெரிய தீயச் செயலாகும் என்பது கருத்து.

**किमीहः किंकायाः स खलु किमुपायस्त्रिभुवन**
**किमाधारो धाता सृजति किमुपादान इति च ।**
**अतर्क्यैश्वर्ये त्वय्यनवसरदास्थो हतधिया**
**कुतर्कोऽय कांश्चिन्मुखरयति मोहाय जगतः ॥ ५ ॥**

**கிமீஹ: கிம்காய: ஸ க[2]லு கிமுபாயஸ் த்ரிபு[4]வனம்**
**கிமாதா[4]ரோ தா[4]தா ஸ்ருஜதி கிமுபாதா[3]ன இதி ச ।**
**அதர்க்யைஸ்வர்யே த்வய்யநவஸர து[3]:ஸ்தோ[2] ஹததி[4]ய:**
**குதர்கோ(அ)யம் காமஸ்சித் முக[2]ரயதி மோஹாய ஜக[3]த: ॥ 5 ॥**

**அவதாரிகை:** - எவர் பிரத்தியக்ஷானுபவத்தை அபலாபம் செய்கின்றனரோ, எவர் சுருதிகளுக்கும் வேறு அர்த்தங் கூறுகின்றனரோ, அவர்களை அனுமானத்தாலேயே நிராகரணம் செய்ய வேண்டும். அவ்வனுமானம், **ஷ்ரித்யாதி[3]கம் ஸகர்த்ருகம் கார்யத்வாத் க[4]டாதி[3]வத்** - என்பது தான். குடம் முதலியவை காரியமாயிருத்தலால் கர்த்தாவுடன் கூடியிருப்பது போல், பிருதிவி முதலிய பூதங்களும் காரியமா யிருத்தலால் கர்த்தாவுடன் கூடியேயிருக்க வேண்டும் என்று இவ்வனு மானத்தால் ஸித்தமாகிறது. இவ்வனுமானத்தையே பூர்வ சுலோகத்தில், **ஜக[3]து[3]த்[3]யரக்ஷாப்ரளயக்ருத்** - என்ற பதத்தால் தெரிவித்துள்ளார். பரமேச்வரன் இல்லை என்று கூறும் நாஸ்திகர்களாகிய பாபிகள் இவ்வனுமானத்திற்குப் பிரதிகூல தர்க்கம் கூறி கூக்குரல் போடுகிறார்கள்.

கார்யமிருப்பதால் பிருதிவி முதலியவற்றிற்குக் கர்த்தா ஒருவனிருக்க வேண்டுமென்பது அவச்யமில்லை என அந்நாஸ்திகர்களின் குதர்க்க வாதம். இதை இதில் நிராகரணம் பண்ணுவது மூலமாய் ஸ்துதி செய்கிறார். அப்பாபிகளின் கூக்குரல் எத்தகைய தென்பதையும் உரைப்பவராய் துதிக்கத் தொடங்கினார்.

**பதவுரை: - ஸ க$^{2}$லு** =- மிகப்பிரஸித்தரான; **தாதா** = பரமேச்வரன்; **கிமீஹ:** = எவ்வித சேஷ்டையுடையவனாய், **கிம்காய:** = எவ்வித சரீரமுடையவனாய்; **கிமுபாய** = எத்தகைய உபாயமுடையவனாய், (நிமித்த காரணமுடையவனாய்); **கிமாதாரோ** = எத்தகைய ஆதாரத்திலிருப்பவனாய்; **கிமுபாதான** = எத்தகைய உபாதான காரணமுடையவனாய்; **த்ரிபு$^{4}$வனம்** = மூன்றுலகங்களையும்; **ஸ்ருஜதி** = ஸிருஷ்டிக்கிறார்; **இதி ச** = என்றிவ்விதமாக; **அதர்க்யைச்வர்யே** = ஊஹித்தறிய முடியாத ஐச்வர்யம் வாய்ந்த; **த்வய்ய** = உன் விஷயத்தில்; **அநவஸரதுஸ்தோ** = அவகாசமின்மையால் அதிதுர்ப்பலமான; **ஹத** = மேற்கூறிய; **குதர்க:** = குதர்க்கமானது; **காம்ஶ்சித்** = சில; **ஹததி$^{4}$ய:** = புத்தி கெட்ட ஜனங்களையும்; **ஜக$^{3}$த:** = இவ்வுலகையும்; **மோஹாய** = ஏமாற்றுவதற்காக (மயங்கச் செய்வதற்காக); **முக$^{2}$ரயதி** = சப்திக்கச் செய்கின்றது.

**கருத்துரை:** - எவ்வித தர்க்கத்திற்கும் விஷயமில்லாத உன்னிடத்திலும், உன் ஐச்வர்யத்திலும், துர்ப்புத்தியுள்ள ஜனங்களால் கூறப்படும் தர்க்கமெல்லாம் குதர்க்கமேயாகும். இதனால், தானும் கெட்டு சந்திரபுஷ்கரணியையும் கெடுத்தான் என்ற பழமொழி போல் உலகினரும் மயக்கமடையும்படி ஏற்படுகிறது. அவ்வித குதர்க்கத்தை எடுத்துக் கூறி இங்கு நிராகரணம் பண்ணுகிறார். அவர்கள் கூக்குரல் போடும் குதர்க்கமாவது: - உலகில் குயவன் முதலியோர் தன் சரீர வியாபாரத்தால் சக்கரத்தைச் சுற்றும்படி செய்து ஜலம் கயிறு முதலிய ஸாமக்ரிகளைக் கொண்டு சக்கரம் என்னும் ஆதாரத்தில் மண்ணாகும் உபதானத்திலிருந்து குடம் முதலியவற்றை உண்டு பண்னுவதாகத் தெரிவதால் அவ்விதமே பரமேச்வரனும் பிரபஞ்சத்தை உண்டு பண்ணுவதாக அங்கீகரிக்க வேண்டும். பரமேச்வரனுக்குக் குயவனைப் போல் சரீரமில்லை. ஆதாரமில்லை. உபாதான காரணமுமில்லையே. இத்தகைய பரமேச்வரன் எங்ஙனம் மூவுலகையும் படைப்பதாகச் சொல்ல முடியும்? பரமேச்வரனுக்கும் சரீராதிகளிருக்கின்றன வென்றால் குயவனைப் போன்ற அப்பரமேச்வரன் ஈச்வரனாக மாட்டான். குடம் முதலிய திருஷ்டாந்தங்களைக் கொண்டல்லவா பிருதிவி முதலியவற்றிற்கும் கர்த்தா வொருவன் இருக்க வேண்டுமென்று அனுமானம் பண்ணப்படுகிறது. அப்படியானால் குடம் முதலியவற்றின் கர்த்தாவான குயவனுக்கு குடத்தைச் செய்ய எந்த எந்த ஸாதநங்கள் கண்டுள்ளோமோ, அவை யெல்லாவற்றையும் பிருதிவி முதலியவற்றிற்குக் கர்த்தாவான பரமேச்வரனுக்கும் ஒப்புக்கொள்ள வேண்டும், அவ் விதமொப்பும் பக்ஷத்தில் அப்பரமேச்வரன் குயவனைப் போன்றவனேயாவான். அவ்விதமொப்பாவிட்டால் கர்த்ருத்வம் பரமேச்வரனிடம் பொருந்தாமற் போவதால் கர்த்தாவாக பரமேச்வரன் அனுமானத்தால் ஸித்திக்க மாட்டான். இதுதான் குதர்க்கமாம். இதற்கு, **அனவஸரது$^{3}$ஸ்த:** - பதத்தால் ஸமாதானம் கூறியிருக்கிறார்.

**அதாவது:** - விசித்திர நாநாவித சக்தி பொருந்திய மாயா சக்தியால் பரமேச்வரன் ஒருவித ஸஹாய்முமின்றி எல்லா உலகையும் ஸிருஷ்டிக்கிறார் என்று ஒப்புக் கொள்வதால் குதர்க்கத்திற்கு அவகாசமில்லை. எவ்வித தர்க்கத்திற்கும் விஷயமில்லாத பரமேச்வரனிடம் குதர்க்கம் புரிவது தவறு, **அசிந்த்யா: க²லு யே பா⁴வ: ததாம்ஸ்தகேர்ணா யோஜயேத்** - தர்க்கிக்கத்தகாத விஷயத்தில் தர்க்கம் சரியன்றென்று நிரூபிக்கப் பட்டுள்ளது. குடம் முதலியவற்றை திருஷ்டாந்தமாய் கூறியிருப்பதால் அவற்றின் கர்த்தாவைப் போலவே பிருதிவி முதலியவற்றின் கர்த்தாவான ஈச்வரனையும் ஆங்கீகரிக்க வேண்டுமென்பது நியாயமன்று. திருஷ்டாந்தத்தில் கண்டுள்ளதை எல்லாம் தார்ஷ்டாந்திகத்தில் ஸாதிப்பதாயிருந்தால் பாகசாலையில் புகைக்கும் நெருப்புக்கும் வியாப்தி அறியப்படுங்காலையில் கறி முதலிய பதார்த்தமும் அறியப் படுவதால் பர்வதத்தில் புகையை கொண்டு நெருப்பை அனுமானம் செய்யும் போது கறி முதலியவற்றையும் அனுமானிக்கும்படி நேரிடும். எனவே திருஷ்டாந்தத்தில் கண்டதையெல்லாம் தார்ஷ்டாந்திகத்தில் ஸாதிக்க முடியாது. குடம் முதலியவற்றின் கர்த்தாவான குயவனைப் போல் பரமேச்வரனாக மாட்டான். ஆகையால் பரமேச்வரனை, குதர்க்கத்தால் நிராகரிக்க முடியாது.

**अजन्मानो लोका: किमवयववन्तोऽपि जगता**
**मधिष्ठातारं किं भवविधिरनादृत्य भवति ।**
**अनीशो वा कुर्याद्भुवनजनने का परिकरो**
**यतो मन्दास्त्वां प्रत्यमरवर संशेरत इमे ॥६ ॥**

**அஜன்மானோ லோகா: கிமவயவவந்தோ(அ)பி ஜக³தாம்**
**அதி⁴ஷ்டா²தாரம் கிம் ப⁴வவிதி⁴ரனாத்³ருத்ய ப⁴வதி ।**
**அநீஶோ வா குர்யாத்³ பு⁴வனஜனனே க: பரிகரோ**
**யதோ மந்தா³ஸ்த்வாம் ப்ரத்யமாவர ஸம்ஶேரத இமே ॥ 6 ॥**

**அவதாரிகை:** - இவ்விதம் ஈச்வரானுமானத்தில் துஷ்டபுத்திகளால் எடுத்துக் காட்டப்பட்ட பிரதிகூல தர்க்கத்தை கண்டனம் பண்ணி விட்டு, அதற்கு அனுகூல தர்க்கத்தைக் கூறும் வகையில் இப்போது பரமேச்வரனைத் துதிக்கின்றார்.

**பதவுரை:** - **அம ரவர:** = தேவசிரேஷ்டனே?; **அவயவவந்த: அபி** = அவயவங்களுள்ளனவாயினும்; **லோகா:** = உலகங்கள்; **அஜன்மான: கிம்** = உண்டாகாதனவா?; **ஜக³தாம்** = உலகங்களுடைய; **பவவிதி** = ஸ்ருஷ்டிக்கிரியை; **அதி⁴ஷ்டா²தாரம்** = கர்த்தாவை; **அனாத்³ருத்ய** = அபேக்ஷிக்காமல்; **பவதி கிம்** = உண்டாகுமோ?; **அநீஶோ** = ஈச்வரனுக்கு அன்யனான யாராவதொருவன்; **குர்யாத்** = உண்டுபண்ணுகிறானென்றால்; (**தர்ஹி** - அப்போது, **தஸ்ய** - அவனுக்கு), **பு⁴வனஜனனே** = இவ்வுலகஸ்ருஷ்டிக்காக; **பரிகர:** = ஸாதனஸாமக்ரீ; **க:** = என்ன; **யத:** = எந்தக் காரணத்தால்; **மந்தா³:** = மூடர்களான; **இமே** = இவர்கள்; **த்வாம் ப்ரதி** = உம்மைப்பற்றி; **ஸம்ஶேரத** = ஐயமுறுகின்றனரோ.

**கருத்துரை:** - அவயவங்களுடன் கூடிய கடம் முதலியவை உற்பத்தி யடைவது போல் இவ்வுலகமெல்லாம் அவயவங்களுள்ளன வாயிருப்பதால் உத்பத்தியுள்ளதேயாகும். ஸ்ரீவேதவியாஸ பகவானும், **யாவத்[3]விகாரம் து விபா[4]கோ[3] லோகவத்** - என்ற ஸூத்திரத்தில் பின்னமான வஸ்துக்களுக்கு உற்பத்தி யுண்டென்று உபதேசித்தினர். கர்த்தா வொருவன் இல்லாமற் போனால் உத்பத்தி ஏற்படுவதில்லை என்பதும் கடம் முதலியவற்றில் கண்டிருக்கிறோம். ஆகவே இவ்வுலக ஸ்ருஷ்டிக்கும் கர்த்தாவொருவன் அவச்யமாகும். ஈச்வரனைத் தவிர வேறு ஜீவர்கள் கர்த்தாக்களாக அங்கீகரிக்க இயலாது. ஏனெனின்? தம் சரீரத்தையே ஸ்ருஷ்டிக்கும் சக்தி ஜீவர்களுக்குக் கிடையாதென்றால், எங்ஙனம் விசித்திரங்களான பதினான்கு உலகங்களை அவர்கள் ஸ்ருஷ்டிக்க சக்தியுடையவராவார்கள்? காலம், மாயை, நியதி, யதிருச்சை, ஸ்வபாவம், தர்மாதர்மங்கள், திக்குக்கள், இவை யாவும் ஜடங்களானதால் சேதன ஸம்பந்தமில்லாமற் போனால் கார்யங்களை உத்பத்தி செய்வதில் பிரவிருத்திக்கமாட்டா. எந்த சேதனன் ஸம்பந்தத்தால் காலம் முதலியவற்றிற்கு உத்பத்தியில் பிருவிருத்தி ஏற்படுகிறதோ, எவன் ஸர்வஜ்ஞனோ, ஸர்வவல்லமை யுடையவனோ, அவ்வீச்வரனே ஜகத்கர்த்தாவாவான், ஈச்வரனைத் தவிர மற்றவரை ஜகத்கர்த்தாவாகக் கூறினால் அவனுக்கு ஜகத்தை உத்பத்தி பண்ண ஸாமக்கிரீ என்ன இருக்கிறது. எனவே எல்லாப் பிரமாணங்களும் ஈச்வரனே ஜகத்கர்த்தாவென்று கூறுவதால் அத்தகைய ஈச்வரனைப் பற்றி ஸம்சயப் படுகிறவர்களோ, கண்டனம் பண்ணுபவர்களோ பரம மூடர்களேயாவர். ஈச்வரன் விஷயத்தில் சுருதிதான் ஸ்வதந்தரப்பிரமாணம். அனுமானம் அன்று. சுருதிப் பிரமாணத்துக்கு ஸஹாயம் புரிவது தான் அனுமானப் பிரமாணத்தின் காரியமாகும், **யதோவா இமானி பூ[4]தானி ஜாயந்தே । யேந ஜாதானி ஜீவந்தி । யத்ரயந்த்யமிஸம் விஷாந்தி । ஆனந்தோ[3] ப்[3]ரஹ்மேதி வ்யஜாநாத் । ஜந்மாந்த்ரஸ்ய யத:** । - என்ற சுருதிஸூத்திரங்களே ஈச்வரன் இருக்கிறானென்பதில் முக்கியப் பிரமாணம் என்று அறியத்தக்கது.

**त्रयी सांख्य योगः पशुपतिमतं वैष्णवमिति**
**प्रभिन्ने प्रस्थाने परमिदमदा पथ्यमिति च ।**
**रुचीनां वैचित्र्याजुकुटिलनानापथजुषां**
**नृणामेको गम्यस्त्वमसि पयसामर्णव इव ॥७ ॥**

**த்ரயீ ஸாங்க்[2]யம் யோக[3]: பஶுபதிமதம் வைஷ்ணவமிதி**
**ப்ரபி[4]ன்னே ப்ரஸ்தா[2]னே பரமித[3]த[3]: பத்[2]யமிதி ச ।**
**ருசீனாம் வைசித்ர்யாத்[3]ருஜுகுடில நானாபத[2]ஜுஷாம்**
**ந்ருணாமேகோ க[3]ம்யஸ்தவமஸி பயஸாமர்ணவ இவ ॥ 7 ॥**

**அவதாரிகை: -** இவ்விதம் ஈச்வரன் இல்லை என்று கூறும் நாஸ்திக மதத்தை நிராகரித்துவிட்டு ஈச்வரன் உண்டென்று கூறும் ஆஸ்திக மதங்கள் எல்லாம் நேராகவோ பரம்பரையாகவோ பரமேச்வரனை அடைவதையே லக்ஷ்யமாகக் கொண்டவை என்பதை இந்தச் சுலோகத்தில் கூறுகின்றார்.

**பதவுரை: - த்ரயீ** = வைதிகமதம்; **ஸாங்க்[2]யம்** = கபிலரின்ஸாங்கிய மதம்; **யோக[3]:** = பதஞ்ஜலியின் யோகமதம்; **பஶுபதிமதம்** = சைவமதம்; **வைஷ்ணவம்** = பாஞ்சராத்திர மதம்; **இதி** = என்று; **ப்ரஸ்தா[2]னேன** = சாஸ்திர மார்க்கம்; **ப்ரபி[4]ன்னே** = பலவிதமாயிருக்கும் போது; **இத[3]ம் ச** = இதுதான்; **பரம்** = உத்கிருஷ்டமானது; **மத:** = அதுதான்; **பத்[2]யம்** = ஹிதமானது; **இத[3]ம் ச** = என்றபடி; **ருசீனாம்** = (பூர்வவாஸனைப்படி) விருப்பங்கள்; **வைசித்ர்யாத்[3]** = வேறுபடுவதால்; **ருஜுகுடிலநானாபத[2]ஜுஷாம்** = நேராயும் கோணலாயும் உள்ள பற்பல மார்க்கங்களில் (மதங்களில்) செல்லுகின்ற; **ந்ருணா** = மனிதர்களுக்கு; **ருஜுகுடிலநானாபதஜுஷாம்** = நேராகவும் வளைவாகவும் செல்கின்ற; **பயஸாம்** = நதிகளுக்கு; **அர்ணவ: இவ** = (அடையுமிடம்) கடல் போல்; **த்வம் ஏக:** = பரமேச்வரனாகிய நீர் ஒருவரே; **க[3]ம்ய:** = புகலிடமாக; **அஸி** = இருக்கிறீர்.

கருத்துரை: - கங்கை, நர்மதை முதலிய நதிகள் நேர்முகமாகவும் யமுனை, ஸரஸ்வதீ முதலிய நதிகள் கங்கையில் கலந்து அதன் மூலமாகவும் எங்ஙனம் கடலை யடைகின்றனவோ, அங்ஙனமே வேதாந்தங்களில் கூறிய வண்ணம் ச்ரவண மனன நிதித்யாஸனம் கேட்பது, ஜபிப்பது, தியானம் செய்வது மார்க்கங்களில் ஈடுபட்டு முமுக்ஷுக்கள் நேராகவும், மற்ற மார்க்கங்களைப் பின்பற்றுபவர்கள் சித்த சுத்தி வாயிலாக பரம்பரையாகவும் பரமேச்வரனையே அடைகின்றனர். சாஸ்திரீய மார்க்கங்கள். (மதங்கள்) எல்லாம் பரமேச்வரனையே அடையும்படி செய்கின்றன.

வெகு விரைவில் பிரயோஜனத்தை கொடுக்கத் ததங்க நேர் மார்க்கம் இருக்கையில் அதில் செல்லாமல் கோணலான மார்க்கங்களில் ஏன் எல்லோரும் செல்கிறார்கள்? பற்பல மதங்களில் (மார்க்கங்களில்) இதுதான் சிரேஷ்டமானது, இதுவே ஹிதமானது என்ற எண்ணத்தால் அந்தந்த மதங்களில் அவரவர்களுக்கு அபிருசி ஏற்படுவதாலும், பூர்வஜன்ம வாஸனையால் இது நேர்மார்க்கம், இது பரம்பரை மார்க்கம் என்று நிச்சயிக்க சக்தி இல்லா மயால் போவதால் பரம்பரை மார்க்கத்திலேயே இது தான் நேர்வழியென்ற பிராந்தி அனைவரும் ஈடுபடுகிறார்கள். அத்தகைய மார்க்கங்கள் (மதங்கள்) எவை என்பதை, தாயீ ஸாங்க்யம் யோக: பசுபதி மதம் வைஷ்ணவம் என்ற வாக்கியத்தால் கூறுகின்றார்.

இங்கு, த்ரயீ என்ற பதத்தால் பதினெட்டு வித்யாஸ்தானங்களையும், அதாவது ஆஸ்திகர் அங்கீகரித்துள்ள சாஸ்திரங்கள் அனைத்தையும் எடுத்துக் கொள்ள வேண்டும். பதினெட்டு வித்யைகளாவன: - ருக் யஜுஸ் ஸாமம் அதர்வணம் என்ற நான்கு வேதங்கள், சிக்ஷை, கல்பம், வியாகரணம், (நிருக்தம், சந்தஸ், ஜ்யோதிஷம் என்ற ஆறு அங்கங்கள்) நியாயம், மீமாம்ஸை, தர்ம சாஸ்திரம், புராணம், என்ற

உபாங்கங்கள் நான்கு, ஆயுர்வேதம், தனுர்வேதம், காந்தர்வ வேதம், அர்த்த வேதம் என்ற நான்கு உப வேதங்கள் - ஆகப் பதினெட்டு வித்யைகள். உப புராணங்களைப் புராணத்திலும், வைசேஷிக சாஸ்திரத்தை நியாயத்திலும், வேதாந்தத்தை மீமாம்ஸையிலும், ஸாங்கியம், பாதஞ்ஜலம், பாசுபதம், வைஷ்ணவம் முதலிய சாஸ்திரங்களையும், மஹாபாரத ராமாயணங்களையும் தர்ம சாஸ்திரத்திலும் அடக்கம் செய்து கொள்ள வேண்டும். உபவேதங்கள் நான்கைத் தவிர மற்ற வித்யாஸ்தானங்கள் பதினான்கு என்கிறது இந்த வாக்கியம்.

**पुराणन्यायमीमांसाधर्मशास्त्रांगमिश्रिता: ।**
**वेदा: स्थानानि विद्यान: धर्मस्य च चतुर्दश ॥**

**புராணந்யாயமீமாம்ஸா தர்மமாஸ்த்ராம் கமிஶ்ரிதா: |**
**வேதா: ஸ்தாநாநி வித்யாந: தர்மஸ்ய ச சதுர்தஶ ||**

ஆஸ்திகர்களின் சாஸ்திரக்கொள்கை இது.

நாஸ்திகர்களுக்கும் ஆறுவகை சாஸ்திரங்களிருக்கின்றன. மாத்யமிக மதம், யோகாசார மதம், ஸௌத்ராந்திக மதம், வைபாஷிக மதம், என்று புத்த மதத்தில் நான்கு. தேஹாத்மவாதி சார்வாகமதம், தேஹபரிமாணாத்மவாதி திகம்பரமதம்; ஆக இந்த நாஸ்திக சாஸ்திரங்களின் ஆறு வகை பற்றி இந்த சுலோகத்தில் ஏன் கூறவில்லையென்றால் இவைகளை வேதங்கள் ஏற்றுக் கொள்ளாததாலும் பரம்பரையாகவாவது புருஷார்த்தங்களுக்கு உபயோகப்படா மலிருப்பதாலும், இங்கே சேர்க்கவிலலை. நேராகவோ மறை முகமாகவோ மோக்ஷத்திற்கு உபயோகப்பட்டுள்ள சாஸ்திரங்களே இங்கே காட்டப் பட்டுள்ளன. பதினெட்டு வித்யாஸ்தானங்களுக்கும் வெவ்வேறு பிரயோஜனம் உண்டு.

தர்மத்தையும், பிரஹ்மத்தையும் உரைப்பதாயும், அபௌரு ஷேயமாயுமுள்ள வாக்யமே வேதம். அது மந்திரம் பிராஹ்மணம் என இருவகைப்படும். யாகத்திற்குக் காரணங்களான திரவியம், தேவதைகளைக் கூறுவது மந்திரம். அது ருக், யஜுஸ், ஸாமம் என்று மூன்று விதமானது. நான்கு பாதங்களுடனும், காயத்ரீ முதலிய சந்தஸ்களுடன் கூடிய மந்திரங்களே ருக்குகள். கானத்துடன் கூடிய அந்த ருக்குகளே ஸாமங்களாகும். இவ்விரண்டிற்கும் வேறாயுள்ளதே யஜுஸ் பிராஹ்மணமும், விதி, அர்த்தவாதம், இவ்விரண்டிற்கும் வேறானது என்று மூன்று வகை விதிக்கு அர்த்தம், பாவனை என்று பாட்டர்களும், ஏவுதல் என்று பிராபாகரர்களும், இஷ்டஸாதனமாயிருத்தலென்று தார்க்கிகர்களும் கூறுகின்றனர். உத்பத்தி விதி, அதிகார விதி, விநியோக விதி, பிரயோக விதி என்று இவ்விதி நான்கு விதமானது. தேவதை, கர்மஸ்வரூபம் இவற்றை தெரிவிக்கும் விதி உத்பத்தி விதி. பிரயோஜனத்துடன் கூட கர்மாவைத் தெரிவிக்கும் விதி அதிகாரவிதி. முக்கிய கர்மா விற்கு அங்கங்களின் ஸம்பந்தத்தைத் தெரிவிக்கும் விதி'விநியோக விதி. இம் மூன்று விதிகளும் சேர்ந்த விதியே பிரயோக விதியெனப்படும். நிந்தையையோ,

ஸ்துதியையோ லக்ஷணையால் தெரிவித்து விதி வாக்கியத்திற்கு சேஷமாயிருக்கும் வாகய்மே அர்த்தவாதம். இந்த அர்த்தவாதமும் குணவதாம், அனுவாதம், பூதார்த்தவாதம் என்று மூன்று விதம். பிரத்தியக்ஷாதி, விருத்தமாகக் கூறும், ஆதித்யோ யூப: என்பது போன்ற வாக்யமே குணவாதம். பிரத்தியக்ஷாதி களால் ஸித்தித்த அர்த்தத்தைக் கூறும் அகனிர் ஹிமஸ்ய பேஷஜம் என்பது போன்ற வாக்கியமே அனுவாதம், பிரத்தியக்ஷாதி பிரமாணங்களால் ஸித்திக்காததாயும் அவற்றுடன் விரோதிக்காததாயும் உள்ள அர்த்தத்தைக் கூறும், இந்தரோ வ்ருத்ராய வஜ்ரம் உதயச்சத் என்பது போன்ற வாக்கியமே பூதார்த்தவாதம்.

விதி, அர்த்தவாதம் இவ்விரண்டிற்கு வேறாயுள்ளது வேதாந்த வாக்கியம். இது கர்மாவை தெரிவிக்காததால் விதி அன்று. ஸ்வப்ரகாச பிரஹ்மத்தைத் தெரிவிப்பதாலும், விதிசேஷமாய் இல்லாமலிருப்பதாலும் அர்த்தவாதமும அன்று.

அதர்வண வேதம் யாகத்தில் உபயோகமாகாவிடினும் சாந்திக, பௌஷ்டிக, மாரணம் முதலிய கர்மாக்களைக் கூறுகினறது. இங்ஙனம் கர்மகாண்ட ஞானகாண்ட வடிவமே வேதம். அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு புருஷார்த்தங்க ளுக்கும் வேதம் காரணமாக இருக்கிறது.

**ஆறு அங்கங்களின் பிரயோஜனம்:** - வேதங்களின் உதாத்தம், அனுதாத்தம், ஸ்வரிதம் ஆகிய ஸ்வரங்களையும், வர்ணங்களைச் சரியாக உச்சாரிக்கும் விதத்தையும் தெரிவிப்பது சிக்ஷை. வேத மந்திரங்களை ஸ்வரம் தவறாகவும், உச்சாரணம் குறைந்தும் அத்யயனம் செய்தால் பயனை அளிக்காமலிருப்பதுமன்றி பல கெடுதல்களும் ஸம்பவிக்கும் சிக்ஷை முதலாவது வேதாங்கமாகும். பாணினி பகவான் சிக்ஷை எழுதியிருக்கிறார். இவ்விதம் ஸ்ரீ வியாஸரும், ஸ்ரீ யாஜ்ஞ வல்க்ய மஹரிஷியுங் கூட சிக்ஷை எழுதியிருக்கிறார்.

**महोक्षः खट्वाङ्गं परशुरजिनं भस्म फणिनः**
**कपालं चेतीयत्तव वरद तंत्रोपकरणम् ।**
**सुरास्ता तामृद्धिं दधति तु भवद्भ्रप्रणिहितां**
**नहि खात्माराम विषयमृगतृष्णा भ्रमयति ॥ ८ ॥**

**மஹோக்ஷ: க$^{2}$ட்வாங்க$^{3}$ம் பரஶுரஜினம் ப$^{4}$ஸ்ம ப$^{2}$ணின:**
**கபாலம் சேதீயத்தவ வரத$^{3}$ தந்திரோபகரணம்**
**ஸுராஸ்தாம் தாம்ருத்$^{3}$தி$^{4}$ம் த$^{3}$த$^{4}$திது ப4வத்3ப்$^{4}$ரூப்ரணிஹிதாம்**
**ந ஹி ஸ்வாதமாராமம் விஷயம்ருக$^{3}$த்ருஷ்ணு ப்$^{4}$ரமயதி** || 8 ||

**அவதாரிகை:** - இவ்விதம் நாஸ்திகர்களின் பூர்வபக்ஷத்திற்கு ஸமாதானம் கூறி எல்லா ஆஸ்திக சாஸ்திரங்களுக்கும் பரமேச்வர ஸ்வரூபத்தை செய்வதிற்றான் தாத்பர்யமென்று சொல்வது மூலமாய் பரமேச்வர ஸ்வரூபம்

விளக்கப்பட்டது. இப்போது, "**பதே$^{3}$தவர்வாசீனே**" - ஒன்று முற்கூறியபடி மங்கள மூர்த்தமாகிய ஸகுண பரமேச்வரனைத் துதிக்கின்றார்.

**பதவுரை: - வரத** = வரத்தை அளிப்பவனே?; **மஹோக்ஷ:** = கிழக்காளைமாடும்; **க$^{2}$ட்வாங்க$^{3}$ம்** = கட்டுவாங்கமென்ற ஆயுதமும்; **பரஶு:** = கோடாரியும்; **அஜினம்** = தோலும்; **ப$^{4}$ஸ்ம** = திருநீறும்; **ப$^{2}$ணின:** = ஸரப்பங்களும்; **கபாலம்** = மண்டையோடும்; **சேதீயத்தவ** = இந்த ஏழும்தான்; **தவ** = உமக்கு; **தந்த்ரோபகரணம்** = குடும்பம் நடத்த ஸாதனம்; **து** = ஆனால்; **ஸுரா:** = தேவர்கள்; **ப$^{4}$வத்$^{3}$ - ப்ரூப்ரணிஹிதாம்** = உம்புருவங்களின் அசைவுமாத்திரத்தால் ஆவிர்பவித்த; **தாம் தாம்** = மிக உயர்ந்த அந்தந்த; **ருத்$^{3}$தி$^{4}$ம்** = ஐச்வர்யத்தை; **த$^{3}$த$^{4}$தி** = வஹிக்கின்றனர். (அடைகின்றனர்;, **ஹி** = ஏனெனின்?; **விஷயம்ருக$^{3}$த்ருஷ்ணா:** = சப்தாதி விஷயங்களாகும் கானல்நீர்; **ஸ்வாதமாராமம்** = தன் ஆத்மாவினிடம் ரமிக்கும் தத்துவஞானியை; **ந ப்$^{4}$ரமயதி** = மயக்காதன்றோ?

**கருத்துரை: -** பரமேச்வரனிடம் காளைமாடு முதலிய ஸாதனங்கள் தான் உண்டு. அவர் தன் குடும்பத்தை ஸம்ரக்ஷணம் பண்ண வேறு உபகரணங்கள் இல்லாதவர். மிக தரித்திரராகிய பரமேச்வரன் பக்தர்களின் பூஜை முதலியவற்றால் ஸந்தோஷமடைந்தாலும் பக்தர்களுக்கு எதைக் கொடுப்பார் என்று நினைக்கலாகாது ஏனெனில்? ப்ருஹ்மாதி தேவரனைவரும் அப்பரமேச்வரனை ஆராதனம் பண்ணி அவரது அனுக்ரஹ மூலமாய் மிகச் சிறந்த ஐச்வர்யத்தை அடைந்துள்ளனரன்றோ? பரமேச்வரன் மிக தரித்திரனாயிருந்தாலும், அவர் பக்தர்கள் அவரது கிருபையால் ஐச்வர்யசாலிகளாயிருக்கிறார்கள் என்ற விசேஷத்தை, து - என்ற பதம் விளக்குகிறது. பிறரை தனிகர்களாகச் செய்வோர் தாமும் மிக தனிகராகவே உலகில் காண்பதால் பரமேச்வரன் உண்மையில் தரித்திரரல்லவென்பது தெளிவாகிறது. தேவர்களை ஐச்வர்யவான்களாக அருள்புரியும் பரமேச்வரன் கிழக்காளை முதலிய ஸாதனங்களுடன் ஏழை வேஷம் என் போடுகிறார் என்றால் பரமேச்வரன் ஸர்வக்ஞன் நித்யமுத்தன் நிரதிகயானந்த ஸ்வரூபீ அவாப்தஸமஸ்த காமனுமானதால் சப்த ஸ்பர்சாதிகளான விஷயங்களை விரும்புவதில்லை. ஞானியாய் ஜீவன் முக்தனாய் ஆத்மாராமனாயுள்ள ஜீவனும் கூட சப்தாதி விஷயங்களை கானல் நீராக மதித்து அவற்றில் மயக்க மடைவதில்லை யென்றால் பரமேச்வரனைப் பற்றிக் கூற வேண்டிய தென்னவிருக்கிறது? இதனால் பரமேச்வரனை தரித்திரனென்று சொல்ல முடியாது. எல்லையற்ற ஐச்வர்ய முள்ளவரே அப்பரமேச்வரன். ஆனாலும் பரமவைராக்யசாலியானதால் அவ்வைச்வர் யத்தைத் தாம் அனுபவிக்க விரும்புவதில்லை. மற்ற தேவர்கள் ஐச்வர்யத்தில் விருப்பமுள்ளவர்களாயிருப்பதால் அனுக்ரஹ மூலமாக அவர்களுக்கு ஐச்வர்யத்தை அளிக்கிறார். விஷ்ணு முதலிய தேவர்களுக்கு ஈச்வரத்வம் பரமேச்வரானு க்ரஹத்தால் தான் ஏற்பட்டது. ஸ்வபாவமாய் இல்லை. பரமேச்வரனுக்கோ ஐச்வர்யம் ஸ்வபாவஸித்தமானது. இதனாலேயே ஆடம்பரத்தில் அவர் பிரியப் படாமல் காளை மாடு, தோல், முதலிய ஸாதனங்களுடன் வைராக்யத்தை பிரகடனம் பண்ணுகிறார். நற்குலத்தில் பிறந்து பரம்பரை பணக்காரனாயுள்ள ஒரு

பிரபுவும் கூட ஆடம்பர வாழ்க்கையில் பிரியப்படாமல் உலகத்தில் இருக்கவில்லையா? இதனாலேயே மஹா கவி ஸ்ரீ காளிதாஸன், **ஏகைஷ்வர்யே ஸ்திதோபி ப்ரணத ப³ஹுப²லேய: க²ம்ய க்ருத்திவாஸா:** - என்று பரமேச்வரனை வர்ணித்தான். ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதரவர்களும்

**आलेपनं भसितयावसतिश्मशान**
**मस्थीनि ते सततमा भरणानि सन्तु ।**
**निहोतुमीशः निखिलश्रुतिसारसिद्ध**
**मैश्वर्यमम्युजभुवोपि न च क्षमस्ते ॥**

என்று பரமேச்வரனுக்கு ஐச்வர்யம் ஸ்வாபாவிகமென்பதை கூறியிருக்கிறார்கள். விருஷபாரூடராயும், கட்டுவாங்கம், பரசு, ஸர்ர்ப்பங்கள் கபாலம் இவற்றை நான்கு கைகளிற் வைத்துக் கொண்டுள்ளவரும், தோலை அணிந்தவராயும், விபூதியை பூசிக் கொண்டுள்ளவராயும், தேவியுடன் கூடியனவராயும் பரமேச்வரனை பக்தர்கள் உபாஸிக்க வேண்டுமென்பது இங்கு கூறப்பட்டுள்ளது. உண்மையில் புருஷன், பிரதானம், மஹத்தத்துவம், அஹங்காரம், தன்மாத்திரை, இந்திரியங்கள், பூதங்கள் இவ்வேழும் விருஷபாதி ஸ்வரூபமாயிருந்து கொண்டு பரமேச்வரனை உபாஸிப்பதாக ஆகம சாஸ்திரங்களின் ஸித்தாந்தம். தவிர மூவுலகும் பரமேச்வரனுடைய குடும்பமாகும், **ஜக³த: பிதரௌ வந்தே³ பார்வதி பரமேஷ்வரௌ** - என்ற படிக்கு எல்லா உலகத்திற்கும் பிதாவான பரமேச்வரன் தன் குடும்பமாகும் இவ்வுலகை யெல்லாம் பரிபாலனம் பண்ணுவதற்காக இந்த தத்துவங்களையே உபகரணமாக வைத்துக் கொண்டு இருக்கிறார் என்று உண்மை கருத்து.

**ध्रुवं कश्चित्सर्वं सकलमपरस्त्व वमिदं**
**परो ध्रौव्याधौव्ये जगति गदति व्यस्तविषये ।**
**समस्तेऽप्येतस्मिन्पुरमथन तैर्विस्मित इव**
**स्तुवञ्जिहेमि त्वां न खलु ननु धृष्टा मुखरता ॥ ९ ॥**

**த்⁴ருவம் கஶ்சித்ஸர்வம் ஸகலம் பரஸ்த்வத்⁴ருவமித³ம்**
**பரோத்⁴ரௌவ்யா(அ)த்⁴ரௌவ்யே ஜக³தி க³த³தி வ்யஸ்தவிஷயே ।**
**ஸமஸ்தே(அ)ப்யே தஸ்மின் புரமத²ன தைர்விஸ்மித இவ**
**ஸ்துவன் ஜிஹ்ரேமி த்வாம் நக²லு நநு த்⁴ருஷ்டா முக²ரதா ॥ 9 ॥**

**அவதாரிகை:** - இங்ஙனம், ஸ்தோத்திரத்திற்கு விஷயரான பரமேச்வரனுடைய ஸகுண நிர்குணஸ்வரூபம் இரண்டும் நிரூபிக்கப்பட்டது. இப்போது ஸ்தோத்திரம் பண்ண வேண்டிய விதத்தைக் கூறித் துதிக்கிறார்.

**பதவுரை: -- புரமத$^{2}$ன:!** = முப்புரமெரித்தவனே; **கஶ்சித்** = ஒருவன்; **த்$^{4}$ருவம்** = எல்லா உலகத்தையும்; **இத$^{3}$ம்** = நித்தியமென்பதாகவும்; **அபரஸ்து** = வேறொருவன்; **இத$^{3}$ம்** = இந்த; **ஸகலம்** = உலகத்தை எல்லாம்; **அத்$^{4}$ருவம்** = அநித்திய மென்பதாகவும்; **பர:** = மற்றொருவன்; **ஸமஸ்தேப்பி** = அனைத்துமாகிய; **யேதஸ்மின்** = சொல்லுகிறான்; **ஜக$^{3}$தி** = உலகில்; **ரௌவ்யாத்$^{4}$ரௌவ்யே** = நித்தியத்வா நித்தியத்வங்கள்; **வ்யஸ்தவிஷயே** = வெவ்வேறு வஸ்துக்களின் தர்மங்கள் எனவும்; **க$^{3}$த$^{3}$தி** = சொல்லுகிறான்; **தே:** = அவ்வசனங்களால்; **விஸ்மித: இவ** = ஆச்சரியத்தை அடைந்தவன் போன்று; **த்வாம்** = உனனை; **ஸ்துவன்** = ஸ்தோத்திரம் செய்கின்றவனாய் கொண்டு; **ஜிஹ்ரேமி ந** = வெட்கப்படுகிறேனில்லை; **க$^{2}$லு** = ஏனெனின்; **முக$^{2}$ரதா** = வாயாடியாயிருப்பது; **த்$^{4}$ருஷ்டா நநு** = வெட்கம் கெட்டதன்றோ.

**கருத்துரை:** - ஸாங்கியம், பரதஞ்ஜலயோகம் இவ்விரு மதத்தினர் இவ்வுலகமெல்லாம் உற்பத்திநாசமற்றதென்று கூறுகின்றனர். அஸத்திற்கு உற்பத்தியும், ஸத்துக்கு நாசமும் ஸம்பவிக்காததால் வெளிப்படுதலும் ஒடுங்குதலும் தான் உத்பத்தி நாசபதங்களுக்கு அர்த்தம். இவ்வுலகங்களை வெளிப்படுத்துவதிலும், ஒடுக்குவதிலும் தான் பரமேச்வரன் கர்த்தாவாவான். உத்பத்தி நாசங்களைச் செய்வதில் அவன் கர்த்தாவில்லை. இது ஸத்காரிய வாதிகளின் இது முதலாவதுபக்ஷம்.

புத்த மதத்தினர். இவ்வுலகமெல்லாம் க்ஷணிகமென்று கூறுகின்றனர். ஸத்து ஸ்திரமாயிருக்க முடியாது. பிரயோஜனக் கார்யத்தை உண்டுபண்ணுவதே ஸத்து. கார்யம் எல்லாம் ஒரே க்ஷணத்திலுண்டாகி அடுத்த க்ஷணத்தில் அஸத்தாகி விடுகிறது. விஞ்ஞானமும் க்ஷணிகமேயாகும். க்ஷணிக விஞ்ஞானதாரையே பரமேச்வரனெனப்படும். எனவே அஸத்தின் உத்பத்திக்குப் பரமேச்வரன் கர்த்தாவேயன்றி ஸத்து ஸ்திரமாக ஆவதற்கு அவர் கர்த்தாவில்லை. இது இரண்டாவது பக்ஷம். இவ்விரு பக்ஷங்களையும் ஸஹிக்காததார்க்கு பக்ஷம் மூன்றாவது தார்க்கிகர்கள் சில பதார்த்தங்களை நித்தியமென்றும் சிலவற்றை அநித்தியமென்றும் கூறுகின்றனர். ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா. பிருதிவீஜலதேஜஸ்வாயூக்களின் பரமாணுக்களும் நித்தியம், மற்ற கார்ய பதார்த்தங்கள் யாவும் அனித்திய மென்று கூறுகின்றனர். அனித்திய வஸ்துக்களுக்குத் தான் உற்பத்தி நாசங்களை பரமேச்வரன் செய்கின்றார். நித்திய வஸ்துக்களுக்கில்லை என்கிறார். இது மூன்றாவது பக்ஷம் இம்மூன்று மதங்களும் த்வைதத்தை அங்கீகரிப்பதால் அத்விதீய ஸச்சிதானந்த பரமசிவஸ்வருபத்தைச் சிறிதும் ஸ்வர்சீய்வது இல்லை. எனவே த்வைதோபாதியுடன் கூடிய ஸகுணேச்வரனுடைய ஐச்வர்யம் மிக அற்பமாயிருப்பதால், அத்தகைய பரமேச்வரனைத் துதி செய்வது வெட்கத்திற்குக் காரணமே யாகும். அம்மூன்று மதவாதிகளும் த்வைதோபாதியுடன் கூடினதும், அல்பமானஜச்வர்யமுள்ளதுமான ஸகுணேச்வரனை ஏன் துதிக்கிறார்களென்று அவர்களிடம் ஆச்சரியங்கொள்கிறேன். உலகத்தில் ஒருவன் ஒரு ஆச்சர்யத்தைக் கண்டு மயங்கிவிட்டால், மற்றவர்

பரிஹாஸத்தையும் பக்ஷயம் செய்ய மாட்டானென்பது போல் போல் நானும், அம்மதவாதிகளின் துதியை கண்டு ஆச்சரியமடைந்து இவன் துதிக்க அறியாதவனென்று மற்றவர் பரிஹஸிப்பதையும் லக்ஷ்யம் உம்மை துதிக்கிறேன். வாயாடியாயிருந்தால் வெட்கம் தெரியாதல்லவா? ஆகையால் த்வைதோ பாதியுடன் கூடிய பரமேச்வரனை துதிப்பது தான் வெட்கத்திற்கு காரணம். அத்வைத பரமேச்வரனை துதிப்பது வெட்க காரணமில்லை. எனவே அத்வைத ஸச்சிதாநந்த பரமேச்வரனையே அனைவரும் துதிக்கவேண்டும்.

**तवैश्वर्यं यत्नाद्यदुपरि विरिंचिहरिरधः**
**परिच्छेत्तुं यातावनलमनलस्कन्धवपुषः ।**
**ततो भक्तिश्रद्धाभरगुरुगृणद्भ्यां गिरिश यत्**
**स्वयं तस्थे ताभ्यां तव किमनुवृत्तिर्न फलति ॥१० ॥**

**தவைஶ்வர்யம் யத்னாத்3 யது3பரி விரிஞ்சிர் ஹரிரத4:**
**பரிச்சே2தும் யாதாவனமனல ஸ்கந்த4வபுஷ: |**
**ததோ ப4க்திஶ்ரத்3தா4 ப4ரகு3ரு க்3ருணத்3ப்4யாம் கி3ரிஶ யத்**
**ஸ்வயம் தஸ்தே2 தாப்4யாம் தவ கிமனுவருந்திர்ந ப2லதி || 10 ||**

**அவதாரிகை:** - இப்படி ஒன்பது சுலோகங்களால் ஸ்தோத்திர ஸாதனங்களைக் கூறி, ஸ்தோத்திரம் செய்யத் தொடங்கும்போது, மிகவும் சக்தி வாய்ந்த ஹரி ப்ரம்மா ஆகியவர்கள் கூடப் பரமேச்வரனுடைய அநுக்ரஹத்தால் தான் பரமேச்வரனை அடைந்ததாகச் சொல்லி ஈச்வரனுடைய முடிவில்லாப் பெருமையை வெளிப் படுத்துகின்றார்.

**பதவுரை:** - **கிரிஸ** = கைலாஸவாஸனே?; **அனல ஸ்கந்தவபுஷ:** = அக்நி ஸ்தம்ப உருக்கொண்ட; **தவ** = உமது; **ஐஸ்வர்யம்** = மஹிமையை; **பரிச்சேத்தும்** = அளந்து அறிவதற்காக; **விரிஞ்சிர்** = பிரஹ்மதேவன்; **உபரி** = மேல் (முடியை) நோக்கியும்; **ஹரி:** = மஹாவிஷ்ணு; **அத:** = கீழ் (அடியை) நோக்கியும்; **யத்னாத்** = முழுப் பிரயத்தனத்துடன்; **யாதோ** = சென்றார்கள் என்ற; **யத்** = யாதொரு காரணத்தால்; **அனல்** = (அளந்தறிய) சக்தியற்றவர்களானார்கள்; **தத:** = பிறகு; **பக்தி ஸ்ரத்தா பரகுரு க்ருணத்ப்யாம்** = பக்தி சிரத்தையுடன் உயர்ந்த முறையில் துதி செய்தவர்களான; **தாப்யாம்** = அவ்விருவர்களுக்கும்; **ஸ்வயம் தஸ்தே** = அவர்கள் முயற்சியின்றித்தாமாகவே அவர்கள் முன் பிரகாசித்தீர். (**தது** = அதனால்) **தவ** = உம்முடைய, **அனுவ்ருந்திர்** = பஜனை செய்வது, **கிம் ந பலதி** = எதைத்தான் கொடுக்காது? (எல்லாவற்றையும் கொடுக்கும்).

**கருத்துரை:** - ஹே பரமேச்வானே? உன் பாதாரவிந்த ஸேவை எதைத்தான் கொடுக்காது. உன் ஸாக்ஷாத்காரமும் உன் ஸேவையால் தான் ஸித்திக்கும். உன்னை ஸேவீக்காவிட்டால் உன் ஸாக்ஷாத்காரம் உண்டாகாது. முன்பு

பிரம்மாவும் விஷ்ணுவும் தங்களுக்குள் உயர்ந்தவர்கள் யாரென்ற விஷயமாகச் சண்டையிடவே, அவர்களது அஹம்பாவத்தை அகற்றுவதற்காக அடி முடியற்றதும், பத்துத் திக்குகளை வியாபித்ததுமான தேஜஸ் ரூபத்துடன் நீர் ஆவிர் பவித்தீர். உமது தேஜோரூபத்தை அளந்து தெரிந்து கொள்வதற்காகத் திருமுடியை நோக்கி பிரஹ்ம தேவரும் திருவடியை நோக்கி மஹாவிஷ்ணுவும் சென்றார்கள். அவர்களால் உமது அடி முடியைக் காணமுடியவில்லை. உமது ஸ்தூல ரூபத்தையே அளந்தறிய முடியவில்லையென்றால் உமது ஸூக்ஷ்ம ஸ்வரூபத்தை அறிய முடியாதென்பதைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? தவிர மஹா மஹிமை வாய்ந்த பிரஹ்ம விஷ்ணுக்களாலேயே உன் ஸ்வரூபம் காண முடியவில்லை என்றால் மற்றவர்களைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமோ? உன்னிடம் பக்தி சிரத்தை இல்லாமல் அஹங்காரத்துடன் கூடியிருந்ததால் தான் முதலில் உன் ஸ்வரூபம் உணர முடியாமலிருந்தது. பின்னர் மனம் வாக்குக் காயங்களால் உன்னிடம் பக்தி செலுத்தி உன்னைத் துதிக்கும் காலத்தில், கருணைக் கடலான நீர் தாமே உம் ஸ்வரூபத்தை அவ்விருவர்களுக்கும் காட்டி அனுக்ரஹித்தீர். எனவே பிரஹ்மா விஷ்ணுக்களும் உமக்கு ஸேவை செய்ததாலேயே உம்மை ஸாக்ஷாத்கரித்தனர். என்றால் மற்றவர்களுக்குக் கேட்க வேண்டுமா! உன் ஸேவை உன் ஸாக்ஷாத்காரத்தையும் உண்டாக்குமானால், வேறெதைத் தான் உண்டுபண்ணாது?

**अयत्नादासाद्य त्रिभुवनमवैरव्यतिकरं**
**दशास्यो यद्बाहूनभृत रणकण्डूपरवशान् ।**
**शिरपद्मश्रेणीरचितचरणाम्भोरुहबले**
**स्थिरायास्त्वद्भक्तेत्रिपुरहर विस्फूर्जितमिदम् ॥ ११ ॥**

**அயத்னாதா$^{3}$ஸாத்3ய த்ரிபு$^{4}$வனமவைரவ்யதிகரம்**
**த$^{3}$ஶாஸ்யோ யத்$^{3}$பா$^{3}$ஹூனப்$^{4}$ருதரணகண்டூ$^{3}$ பரவஶான் ।**
**ஶிர: பத்$^{3}$மஶ்ரேணீ ரசித சரணாம்போ$^{4}$ருஹ ப$^{3}$லே:**
**ஸ்தி$^{2}$ராயாஸ்தவத்$^{3}$ ப$^{4}$க்தேஸ்த்ரிபுரஹர விஸ்பூ$^{2}$ர்ஜிதமித$^{3}$ம்** ॥ 11 ॥

**அவதாரிகை:** - ராக்ஷஸனாகிய ராவணனுக்கும் பரமேச்வரன் அனுகிரஹம் புரிந்ததைக் காட்டுபவராய்த் துதிக்கின்றார்.

**பதவுரை:** - **த்ரிபுரஹர** = முப்புரமெரித்தோனே?; **த$^{3}$ஶாஸ்யோ** = ராவணன்; **த்ரிபு$^{4}$வனம்** = மூன்று உலகங்களையும்; **அயத்னாத்$^{3}$** = பிரயத்தனமின்றியே; **அவைர வ்யதிகரம்** = விரோதமில்லாததாக; **தாபாத்ய** = செய்து; **ரணகண்டூ$^{3}$ பரவஶான்** = யுத்தத் தினவு கொண்டவைகளான; **பா$^{3}$ஹூன்** = இருபது கைகளையும்; **அப்ருத** = தரித்தானென்பது; **யத்$^{3}$** = யாதொன்று உண்டோ; **இத$^{3}$ம்** = இது; **ஸிர: பத்$^{3}$மஸ்ரேணீ ரசித சரணாம்போருஹ பலே:** = தன் சிரஸ்களாகிற தாமரை மலர்களை உமது திருவடியின் பூஜைக்குரியவையாகச் செய்த; **ஸ்தி$^{2}$ராயா:** = திடமான; **ஸ்த்வத் ப$^{4}$க்தே:** = உம்மிடம் வைத்த பக்தியின்; **விஸ்பூ$^{2}$ர்ஜிதம்** = பயனாகும்.

**கருத்துரை:** - ஹே பரமேச்வரனே! ராவணன் தனது ஒன்பது தலைகளையும் கொய்து உமது சரணாரவிந்தங்களில் மலர்களாக அர்ப்பணம் செய்து திடமான பக்தி செலுத்தினான். அதனால் தான், சத்துரு இல்லாமல் மூவுலகத்திற்கும் அதிபதியாகவும், மஹாபராக்கிரம் முள்ளவனாயுமிருந்தான். உமது பக்தியின் மஹிமையை என்னென்று கூறுவது? ராவணனுடைய பராக்கிரமத்தைக் கேள்வியுற்ற மாத்திரத்திலேயே இந்திராதிகளும் கூடத் தம் கர்வத்தை நழுவ விட்டு வேலைக்காரர்களாக ஆகிவிடுகின்றனர். எனவே ஓரிடத்திலும் ராவணனுக்கு யுத்தமே உண்டாகவில்லை. ராவணனுடன் போர் புரியக் கூடிய வீரன் ஒருவனுமில்லை. இதனால் ராவணனுடைய கைகள் யுத்தத்தில் தினவு கொண்டே எப்போதும் இருக்கின்றன. இவ்விஷயத்தை, **அயஹாத் ரணப2ண்டு பரப3ஷான்** - என்ற விசேஷணங்கள் கூறுகின்றன. பரமேச்வரனிடம் செலுத்திய பக்தி விசேஷத்தாலேயே ராவணன் மிக பராக்கிரமசாலியாயும் ஸர்வலோகத்துக்கும் அதிபதியாகவும் பிரகாசித்தான் என்று கருத்து.

**अमुल्य त्वत्सेवासमधिगतसारं भुजवन**
**बलात्कैलासेऽपि त्वदधिषसतौ विक्रमयतः ।**
**अलभ्या पातालेऽप्यलसचलिताङ्गुष्टशिरसि**
**प्रतिष्ठा त्वय्यासीद्ध्रवमुपचितो मुखतिः खलः ॥१२॥**

**அமுஷ்ய த்வத்ஸேவா ஸமதி4க3தஸாரம் பு4ஜவனம்**
**ப3லாத் கைலாஸே(அ)பி த்வத3தி4வஸதௌ விக்ரமயத: ।**
**அலப்4யா பாதாளே(அ)ப்யலஸசலிதாங்கு3ஷ்ட2ஶிரஸி**
**ப்ரதிஷ்டா2த்வய்யாஸீத்3த்4ருவமுபசிதோ முஹ்யதி க2ல: ॥ 12 ॥**

**அவதாரிகை:** - இவ்விதம் ராவணனுக்கும் பக்தி வசத்தால் அருள் புரிந்ததைக் கூறி, கர்ம வசத்தால் தண்டித்ததைக் கூறுபவராய்த் துதிக்கின்றார்.

**பதவுரை:** - (**ஹே பகவானே** = ஓ பகவானே?); **த்வத்ஸேவா ஸமதி4க3த ஸாரம்** = உமது ஸேவையால் மிகுந்த பலத்தை அடைந்த; **பு4ஜவனம்** = தன் கைகளின் வரிசையை; **ப3லாத்** = முழுபலத்துடன்; **த்வததி4வஸதௌ** = உம்முடைய வாஸஸ்தானமாகிய; **கைலாஸேபி** = கைலாஸ மென்னும் பர்வத்திடமே; **விக்ரமயத:** = (செலுத்திய) காண்பித்த; **அமுஷ்ய** = அந்த ராவணனுக்கு; **ப்ய** = நீர்; **அலஸ சலிதாங்கு3ஷ்ட2 ஶிரஸி** = கால் பெருவிரல் நுனியைச் சிறிது அழுத்தி ஊன்றிய போது; **பாதாளேபி** = பாதாளமென்னும் கீழுலகத்திலும் கூட; **ப்ரதிஷ்டா2** = இருப்பதற்கு இடம்; **அலப்4யா** = அரிதாக; **ஆஸீத்3** = ஆயிற்று; **உபசித:** = ஐச்வர்யத்தால் அகம்பாவத்துடன் வளர்ந்த; **க2ல:** = துஷ்டன்; **முஹ்யதி** = மயக்கமுறுகிறான் இது; **த்4ருவம்** = நிச்சயம்.

**கருத்துரை:** - ஓ பகவானே! உமது அனுக்ரஹத்தால் பராக்கிரமத்தையும், ஐச்வர்யத்தையும் அடைந்த ராவணன் உமது அனுக்ரஹத்தை மறந்து உம்மிருப்பிடமாகிய கைலாஸ்த்தையே பிடுங்கி லங்கைக்குக் கொண்டு போக எண்ணி இருபது கைகளாலும் அதை அசைக்கவே, பயமடைந்த பார்வதி தேவியின் பிரார்த்தனையின் பேரில் நீர் உமது திருவடி பெருவிரல் நுனியைக் கீழே கொஞ்சம் அழுத்தின மாத்திரத்தில் பலத்தை யெல்லாம் இழந்து பாதாள லோகத்திலும் இடம் கிடைக்காமல் தவித்தான். உமது பராக்கிரமத்தை என்னென்று வருணிப்பது! ராவணன் தனக்கு அருள் புரிந்த பரமேச்வரனையே ஏன் மறந்தான் என்றால் மகாதுஷ்டனானதால் பரமேச்வரனை மறந்து நன்றி கெட்டவன் ஆனான். தம் ஐச்வர்யத்துக்கும், பராக்கிரமத்திற்கும் காரணமானவரையே மறப்பது (செய்நன்றி மறத்தல்) கர்வங்கொள்வது மூர்க்கரின் ஸ்வபாவம் அன்றோ?

**यद्धिं सुत्राम्णो वरद परमोचैरपि सती**
**मधश्चक्रे वाणः परिजनविधेयस्त्रिभुवनः ।।**
**न तच्चित्रं तस्मिन्वरिवसितरि त्वच्चरणयो**
**नं कस्या उनकै भवति शिरसस्त्वय्यवनतिः ॥ १३ ॥**

**யத்$^{3}$ ருத்$^{3}$தி$^{4}$ம் ஸுத்ராமணோ வரத$^{3}$ பரமோச்சைரபி ஸதீம்**
**அத$^{4}$ஶ்சக்ரே பா$^{3}$ண: பரிஜன விதே$^{4}$ய த்ரிபு$^{4}$வன:**
**ந தச்சித்ரம் தஸ்மின் வரிவஸிதரி தவச்சரண்யோ:**
**ந கஸ்யா உன்னத்யை ப$^{4}$வதி ஶிரஸஸ்த்வய்யவநதி:** || 13 ||

**அவதாரிகை:** - இவ்விதம் பரமேச்வரனிடம் தன் பெருமையைக் காட்டிய ராவணன் சிறுமையடைந்ததைக் கூறி இப்போது பரமேச்வரனிடம் பணிவு காட்டிய பாணாஸுரன் உயர்வு அடைந்ததைக் கூறுகின்றார்.

**பதவுரை:** - **வரத$^{3}$** = வரங்களை வாரி வழங்குபவனே?; **பரிஜன விதே$^{4}$ய த்ரிபு$^{4}$வன:** = தன் வேலைக்காரர்களால் மூவுலகையும் வசம்செய்த, அல்லது தன் வேலையாட்களாக மூவுலகங்களைச் செய்த; **பா$^{3}$ண:** = பாணாஸுரன்; **ஸுத்ராம்ண:** = இந்திரனுடைய; **பரமோச்சைரபி ஸதீம்** = மிக மேன்மையுள்ளதான; **ருத்$^{3}$தி$^{4}$ம் அபி** = ஐச்வர்யத்தையும் கூட; **அத$^{4}$ஶ்சக்ரே** = அல்பமானதாகச் செய்து விட்டான், **யத்$^{3}$** = என்பது யாதொன்றுண்டோ; **தத்$^{3}$** = அது; **த்வத் சரணயோ:** = உங்கள் சரணங்களை; **வரிவஸிதரி** = நமஸ்கரித்த அல்லது பூஜித்த; **தஸ்மின்** = அந்த பாணாஸுரனிடம் ஏற்பட்டது; **ந சித்ரம்** = ஆச்சரியமில்லை; **த்வயி** = உம்மிடத்தில் (செய்து); **ஶிரஸ:** = தலையின்; **அவநதி:** = வணக்கமானது; **கஸ்யை உன்னத்யை** = எப்படிப்பட்ட மேன்மையைத் தான் கொடுப்பதாக; **ந ப$^{4}$வதி** = ஆகாது.

**கருத்துரை:** - பரமேச்வரனிடம் பணிவு காட்டிப் பக்தி செலுத்தியதன் பயனாக பாணாஸுரன் பராக்கிரமசாலியாகவும் இந்திரனின் மூவுலகாதிபத்ய மென்ற

ஐச்வர்யத்தையும் அல்பமானதாகச் செய்தடைந்தவனாயும் பிரகாசித்தான். இதில் ஆச்சரியமில்லை. பரமேச்வர பக்திக்கு பிரயோஜனம் அளவிட முடியாம லிருப்பதால், பாணன் அடைந்த பிரயோஜனம் மிகக் கொஞ்சமே யாகும். பரமேச்வரன் விஷயத்தில் தலை வணங்கினால் எங்கும் எப்போதும் உன்னதி பெறலாம். பரமேச்வர நமஸ்காரம் மோக்ஷ பரியந்தம் பிரயோஜனத்தை அளிக்கும். எனவே பாணாஸுரன் பெற்ற பிரயோஜனம் மிகக் கொஞ்சம் தான். இதனால் பரமேச்வரன் ஸர்வோத் கிருஷ்டரென்றும், மஹாமஹிமை பொருந்தியவரென்றும் நிரூபிக்கப்பட்டது.

**अकाण्डब्रह्माण्डक्षयचकितदेवासुरकृपा**
**विधेयस्यासीद्यस्त्रिनयन विषं संहृतवतः ।**
**स कल्माषः कण्ठे तव न कुरुते न नियमहो**
**विकारोऽपि श्लाघ्यो भुवनमयमङ्गव्यसनिनः ॥१४॥**

**அகாண்ட³ ப்³ரஹ்மாண்ட³ க்ஷயசகித தே³வாஸுரக்ருபா**
**விதே⁴யஸ்யா(அ)(அ)ஸீத்³ யஸ்த்ரிநயன விஷம் ஸம்ஹ்ருதவத: |**
**ஸ கல்மாஷ: கண்டே² தவ ந குருதே ந ஶ்ரியமஹோ**
**விகாரோ(அ)பி ஶ்லாக்⁴யோ பு⁴வன⁴பய ப⁴ங்க³வ்யஸனின: || 14 ||**

**அவதாரிகை:** - இப்போது காலகூட விஷபக்ஷணத்தை வெளிப்படுத்திக் கொண்டு துதிக்கின்றார்.

**பதவுரை:** - **த்ரிநயன** = முக்கண்ணனே?; **அகாண்ட³ ப்³ரஹ்மாண்ட³ க்ஷயசகித தேவாஸுரக்ருபா** = அகாரணமாயுதித்த மஹாப்பிரளயத்தால் அச்சங்கொண்ட தேவாஸுரர் மீது வைத்த தயைக்கு வசப்பட்டவரும்; **விஷம்** = கால கூட விஷத்தை; **ஸம்ஹ்ருதவத:** = விழுங்கினவருமான; **தவ** = உமது; **கண்டே²** = கழுத்தில்; **ய:** = எந்த; **கல்மாஷ:** = களங்கம்; **ஶ்ரியம்** = அழகை; **ந குருதே ந** = உண்டு பண்ணாமல் இல்லை; **அஹோ** = ஆச்சரியம்; **பு⁴வனப⁴ய ப⁴ங்க³வ்யஸனின:** = எல்லா ஜனங்களின் அச்சமொழிப்பதில் கவலையுள்ளவனுக்கு; **விகாரோ(அ)பி** = தோஷமும்; **ஶ்லாக்⁴யோ** = கொண்டாடத் தக்கதன்றோ!

**கருத்துரை:** - ஓ பகவானே? பாற்கடலைக் கடையுங்காலத்தில் திடீரென்று தோன்றிய விஷஜ்வாலையால் அஞ்சியோடித் தங்களைச் சரண் புகுந்த தேவர் அஸுரர் ஆகியவர்களிடம் கருணை செலுத்தி அக்காலகூட விஷத்தைப் பானம் பண்ணினீர். மற்றத் தேவர்களால் அவ்விஷத்தை அடக்கவும் தடுக்கவும் முடியவில்லை. மற்றவர் ஒருவராலும் செய்யமுடியாத விஷபானத்தை நீர் இவ்வுலகத்தை எல்லாம் காப்பதற்காகச் செய்தீர். அது ஒரு களங்கம் போல் உமது கழுத்தில் ஏற்பட்டது. உலக ஸம்ரக்ஷணத்தின் பொருட்டு ஏற்பட்ட அந்தக் களங்கமும் ஓர் ஆபாணம் போல உமக்கு அழகாகவே இருக்கின்றது. உலகத்திற்கு

உபகாரம் செய்வதிலேயே நோக்கங் கொண்ட ஒருவனுக்கு எவ்வளவு பெரிய தோஷம் நேர்ந்தபோதிலும் அது பெருமைக்குரியதேயன்றி நிந்தைக்குரியதன்று நிந்தைக்குரியதன்று அல்லவா! இதனாலேயே நீர் நீலகண்டன் என்ற திருநாமம் பெற்றீர். ஸ்ரீமத் அப்பய்ய தீக்ஷிதரும் இவ்விஷயத்தை இவ்வாறு வர்ணிக்கிறார்:

**गंगा धृता न भवता शिव पाविनीति नाखादितो मधुर इत्यपि कालकूटः ।**
**संरक्षणाय जगतां करुणातिरेकात् कर्मद्वयं कलितमेतदनन्यसाध्यम् ॥**

**கங்கா த்ருதா ந பவதா ஶிவ பாவிநீதி நாஸ்வாதிதோ மதுர இத்யபி காலகூட: |**
**ஸ்ம்ரக்ஷணாய ஜகதாம் கருணதிரேகாத் கர்மத்வயம் கலிதமேதத் அநந்ய ஸாத்யம் ||**

**असिद्धार्थी नैव क्वचिदपि सदेवासुरनरे**
**निवर्तन्ते नित्यं जगति जयिनी यस्य विशिखा ।**
**स पश्यन्नीश स्वामितरसुरसाधारणमभूद**
**स्मरः स्मर्तव्यात्मा न हि वशिषु पथ्यः परिभवः ॥१५ ॥**

**அஸித்$^3$தா$^4$ர்த்தா$^2$ நைவ க்வசித$^3$பி ஸதே$^3$வாஸுரநரே**
**நிவர்த்தந்தே நித்யம் ஜக$^3$தி ஜயிநோ யஸ்ய விஶிகா$^2$: |**
**ஸ பஶ்யந்நீஶ த்வாமிதரஸுரஸாதா$^4$ரணமபூ$^4$த்**
**ஸ்மர: ஸ்மர்த்தவ்யாத்மா ந ஹி வஶிஷு பத்$^2$ய: பரிப$^4$வ: || 15 ||**

**அவதாரிகை:** - இப்போது காமனைக் கண்ணால் எரித்ததைக் கூறித் துதிக்கின்றான்.

**பதவுரை:** - **ஈஶ** = இறைவனே; **யஸ்ய** = எவனுடைய; **ஜயிநோ:** = ஜயிக்கிறதே இயற்கையாயமைந்த, **விஸிகா$^2$:** = பாணங்கள்; **ஸதே$^3$வாஸுர நரே** - தேவர்கள் அஸுரர்கள் மனிதர்களுடன் கூடிய; **ஜக$^3$தி** = மூன்றுலகத்தில்; **க்வசித$^3$பி** = ஓரிடத்திலும்; **அஸித்$^3$தா$^4$ர்த்தா$^2$:** = பிரயோஜனத்தை அடையாமல் அல்லது வியர்த்தமாக; **நித்யம்** = எப்பொதும்; **நிவர்த்தந்தே** = திரும்பவே மாட்டாவோ; **ஸ:** = அத்தகைய; **ஸ்மர:** = காமன்; **த்வாம்** = உம்மை; **இதரஸுரஸாதா$^4$ரண** = மற்றத் தேவர்களுக்கொப்பாக; **பஶ்யந்** = பார்த்து (நினைத்து); **ஸ்மர்த்தவ்யாத்மா** = நினைவில் மட்டும் உடம்புடையவனாய்; **அபூ$^4$த்** = ஆனானோ; **ஹி** = ஏனெனின்; **மபூத்** = ஜிதேந்திரியர்களான புருஷர்களிடம் (செய்யும்); **பரிப$^4$வ:** = அவமானமானது; **ந பத்$^2$ய:** = ஹிதகரமாகாதன்றோ?

**கருத்துரை:** - ஓ பரமேச்வரனே? எந்த மன்மத பாணங்கள் தேவர் அஸுரர் மனிதர் நிரம்பிய மூவுலகத்திலும் ஓரிடத்திலாவது கார்யத்தைப் பூர்த்தி செய்யாமல் வியர்த்தமாகத் திரும்ப மாட்டாவோ, அத்தகைய பராக்கிரமம் வாய்ந்த

மன்மதனும்கூட மற்றத் தேவர்களைப்போல் பாமேச்வரனையும் ஜயித்து விடலா மென்ற கெட்ட எண்ணத்தால் உம்மிடம் பாணப்பிரயோகம் செய்ய குறி வைத்துப் பார்க்குங் காலையிலேயே உமது நெற்றிக்கண்ணால் அந்தக் க்ஷணத்திலேயே நாசமடைந்தான். நாமும் கோவிலில் பரமேச்வரனைப் பார்க்கிறோம். மன்மதனும் அவரையே பார்த்தான். நமக்கு க்ஷேமமும் மன்மதனுக்கு நாசமுமேற்படுகின்றன. காரண மென்ன? நாம் பரமேச்வரனை நல்ல எண்ணத்துடன் க்ஷேமத்தைக் கருதிப் பார்ப்பதால் க்ஷேமமடைகிறோம். மன்மதனோ கெட்ட எண்ணத்துடன் மற்றத் தேவர்களுக்கு ஸமானமாகக் கருதி பரமேச்வரனை அடிக்கக் குறிவைத்துப் பார்ப்பதால் உடனேயே நாசமுற்றான். கெட்ட எண்ணத்துடன் பரமேச்வரனைப் பார்ப்பதே நாசகாரணமென்று ஏற்படுமானால், மற்ற அவமானம் முதலிய காரியங்கள் நாசகாரணமென்பதில் ஸந்தேகமே இல்லை. ஜிதேந்திரியர்களான மஹான்களுக்குச் செய்யும் அபராதமே நன்மையைக் கொடுக்காது, கேட்டைத்தான் விளைவிக்குமென்றால் ஜிதேந்திரியர்களுக்குள் சிரேஷ்டரான பரமேச்வரனுக்குச் செய்யும் அபராதத்தைப்பற்றிக் கேட்கவே வேண்டாம். மஹாகவி காளிதாஸனும் இவ் விஷயத்தை அழகாக இப்படிக் கூறுகிறார்.

**क्रोधं प्रभो संहर संहरेति यावद्गिरःखेमरुतां चरन्ति ।**
**तावत्स वह्निर्भवनेत्रजन्मा भस्मावशेष मदनं चकार ।**

**க்ரோதம் ப்ரபோ ஸம்ஹர ஸம்ஹரேதி யாவத் கிர: கேமருதாம் சரந்தி ।**
**தாவத் ஸ வஹ்நிர் பவநேத்ரஜன்மா பஸ்மாவ ஶேஷம் மதநம் சகார ॥**

**मही पादाघाताबजति सहसा संशयपदं**
**पदं विष्णो र्भ्यद्भुजपरिघरुग्णग्रहगणम् ।**
**मुहुर्धौंदौस्थ्यं यात्यनिभृतजटाताडिततटा**
**जगद्रक्षायै त्वं नटसि ननु वामैव विभुता ॥१६ ॥**

**மஹீ பாதா$^{3}$கா$^{4}$தாத்$^{3}$ வ்ரஜதி ஸஹஸா ஸம்ஶயபத$^{3}$ம்**
**பத$^{3}$ம் விஷ்ணோர்ப்$^{4}$ராம்யத்$^{3}$ பு$^{4}$ஜ பரிக$^{4}$ருக்$^{3}$ண க்$^{3}$ரஹக$^{3}$ணம் ।**
**முஹுர்த்$^{3}$யௌர்தௌ$^{3}$ஸ்த்$^{2}$யம் யாத்யனிப்$^{4}$ருத ஜடாதாடி$^{3}$ததடா**
**ஜக$^{3}$த்$^{3}$ரக்ஷாயை த்வம் நடஸி நனு வாமைவ விபு$^{4}$தா ॥ 16 ॥**

**அவதாரிகை:** - இப்போது பரமேச்வரன் உலகத்தைக் காப்பதற்காகச் செய்த நடனத்தைக் கூறுபவராய்த் துதிக்கின்றார்.

**பதவுரை:** - (**ஈஶ** = இறைவனே, **யதா** - எப்பொது); **த்வம்** = நீர்; **ஜக$^{3}$த்$^{3}$ரக்ஷாயை** = உலகத்தைக் காப்பதற்காக; **நடஸி** = நடிக்கின்றீரோ; (**ததா** = அப்பொது); **மஹீ** = பூமியானது; **பாதாகாதாத்** = கால்களின் இடியால்; **ஸஹஸா** =

சீக்கிரமாக; **ஸம்ஶயபத3ம்** = ஸங்கட நிலைமையை; **வ்ரஜதி** = அடைகின்றது; **ப்ராம்யத் புஜ பரிக4ருக்3ண க்3ரஹக3ணம்** = சுழல்கின்ற புஜதண்டங்களால் பீடிக்கப்பட்ட நக்ஷத்திர கூட்டங்களையுடைய; **விஷ்ணோர் பத3ம்** = அந்தரிக்ஷலோகமும்; (**ஸம்ஶயபதம்** = ஸங்கட நிலைமையை, **வ்ரஜதி** = அடைகின்றது); **அநிப்4ருத ஜடாதாடி3ததடா:** = விரிந்த சடைகளால் அடிக்கப்பட்ட பிரதேசத்தையுடைய; **த்3யௌர்** = ஸ்வர்க்கமும்; **தௌ3ஸ்த்2யம்** = துக்கஸ்திதியை; **யாத்** = அடைகின்றது; **விபு4தா** = பிரபுவாயிருப்பதானது; **வாமைவ** = பிரதிலுத்தையே தருவதாகும்; **நநு** = ஆச்சரியம்!

**கருத்துரை:** - ஓ பரமேச்வரனே! ஒவ்வொரு ஸாயங்காலத்திலும் உமது வரத்தால் மஹாபலம் பெற்ற தாருகன் அஸுரன் இவ்வுலகத்தை அழிக்க முற்படுங்காலையில், அவனிடமிருந்து இவ்வுலகத்தை ரக்ஷிப்பதற்காக அவன் முன்பு நீர் ஆனந்த நர்த்தனம் பண்ணி அவனை மயங்கும்படி செய்கிறீர். இதனால் அவ்வஸுரனுக்கு அவ்வெண்ணம் மாறிவிடுகிறது. இவ்வுலகத்தைக் காப்பதற்காகவே நீர் நர்த்தனம் பண்ணுகிறீர். ஆனால் உலகம் அனைத்தும் கொஞ்சம் துன்பப்படுகிறது. உமது கால்களின் இடியால் பூமி ஸங்கடப்படுகிறது. புஜதண்டங்களின் அடியால் நக்ஷத்திரக் கூட்டமும், அந்தரிக்ஷலோகமும் துன்புறுகின்றன. விரிந்த சடைகளின் அடியால் ஸ்வர்க்கம் முதலிய லோகமும் துக்கப்படுகிறது. எல்லாமுணர்ந்த பரமேச்வரன் இவ்வுலகத்துக்குத் துன்பம் தரும் நர்த்தனத்தை அஜ்ஞன் போல் என் செய்கிறாரென்றால்? பிரபுத்வமானது நன்மையை உண்டாக்குங் காலத்தில் தீமையையும் சிறிது உண்டு பண்ணுவதென்பது உலக ஸ்வபாவம். ஒரு அரசன் தன் தேசத்தை ரக்ஷிப்பதற்காக ஸேனையுடன் அங்குமிங்கும் ஸஞ்சரிக்குங்காலையில் அச்சேனையால் தேசத்திற்குச் சிறிது துன்பம் ஏற்படுவது ஸ்வபாவமாய்க் கண்டிருக்கையில், எல்லா உலகத்திற்கும் அரசனாகிய பரமேச்வரனைப்பற்றிச் சொல்லவே வேண்டாம். ஆகையால் பிரபுத்வம் அனுகூலத்தைக் கொடுப்பதுடன் பிரதி கூலத்தையும் கொஞ்சம் கொடுப்பது ஆனதால் பரமேச்வரனின் நர்த்தனமும் அவ்விதமேற்படுகிறது.

**वियद्व्यापी तारागणगुणितफेनोद्गमरुचिः**
**प्रवाहो वारां यः पृषतलघुदृष्टः शिरसि ते ।**
**जगद्द्वीपाकारं जलधिवलयं तेन कृतमि**
**त्यनेनैवोनेयं धृतमहिम दिव्यं तव वपुः ॥१७॥**

**வியத்3வ்யாபீ தாராக3ணகு3ணித பே2நோத்3க3ம ருசி:**
**ப்ரவாஹோ வாரம் ய: ப்ருஷதலகு4த்3ருஷ்ட: ஶிரஸி தே ।**
**ஜக3த்3த3வீபாகாரம் ஜாதி4வலயம் தேநக்ருதமி -**
**த்யனேனை - வோன்னேயம் த்4ருத மஹிம தி3வ்யம் தவ வபு: ॥ 17 ॥**

**அவதாரிகை:** - இப்போது கங்கையை அணிந்துகொண்ட விதத்தைக் காட்டுபவராய்த் துதிக்கின்றார்.

**பதவுரை:** - (**ஈஶ** = இறைவனே!) **வியத்³வ்யாபீ** = ஆகாசத்தை வியாபித்துள்ளதும்; **தாராக³ணகு³ணித பே²நோத்கம ருசி:** = நக்ஷத்திரக் கூட்டங்களால் விருத்தியடைந்த நுரையின் காந்தியையுடையதுமான; **ய:** = யாதொரு; **வாராம்** = கங்காஜலங்களுடைய; **ப்ரவாஹா:** = பிரவாஹமுண்டோ; (**ய:** = அது); **தே** = உமது; **ஶிரஸி** = தலையில்; **ப்ருஷத லகு⁴த்³ருஷ்ட:** = ஒரு திவிலைக்கும் ஸூக்ஷ்மமாய் காணப்பட்டது; **தேந** = அக்கங்கைப் பிரவாஹத்தால்; **ஜலதி⁴வலயம்** = கடல்களைவளையமாயுடைய; **ஜக³த்³** = இவ்வுலகம்; **த்³வீபாகாரம்** = ஏழு தீவுகளாக; **த்⁴ருதம்** = செய்யப்பட்டது; **த்யனேனை** = என்ற காரணத்தாலேயே; **தவ** = உமது; **தி³வ்யம்** = அப்பிராகிருதமான; **வபு:** = சரீரமானது; **தமஹிம** = மஹாமஹிமை பொருந்தியதாக; **உன்னேயம்** = ஊகித்து அறியத்தக்கதே.

**கருத்துரை:** - ஓ பரமேச்வரனே! பகீரதன் பிரார்த்தனையால் பூமிக்கும், பாதாளத்திற்கும் வருகிறதற்கு ஸம்மதித்த கங்கையைத் தரிக்க பூமிக்கும், மற்றத் தேவர்களுக்கும் சக்தி இல்லாமற் போகவே நீர் அவளை சிரஸில் தாங்கினீர். அந்தக் கங்கை ஆகாசம் பூராவும் மறைத்துக்கொண்டு அலை நுரை ஜல ஜந்துக்கள் இவைகளுடன் சப்தம் போட்டுக்கொண்டு மிக கர்வங்கொண்டவளாய் உமது தலையில் விழுந்தாள். உமது தலையில் சடைகளின் ஒரு மூலையில் அலத்தி விலைக்கும் சிறியதாக அவள் ஆகிவிட்டாள். இதனால் நீர் அவள் கர்வத்தை அடக்கினீர். பிறகு பகீரதன் பிரார்த்தனையின் பேரில் சடையிலிருந்த கங்கையை நீர் வெளியிடவே, அகஸ்திய முனிவரால் ஆசமனம் செய்யப்பட்டு வறண்டுபோன ஏழு ஸமுத்திரங்களையும் அந்தக் கங்கை தன் பிரவாஹத்தால் பூர்த்தி செய்தாள். அதனாலேயே இவ்வுலகமே தீவுகளாக ஆயிற்று. எந்தக் கங்கா பிரவாஹம் உம் சிரஸில் திவிலைக்கும் அற்பமாக இருந்ததோ, அதின் ஒரு பாகமே ஏழு ஸ்முத்திரமாயிற்று. அந்தக் கங்கையின் ஒரு பாகமே ஆகாசத்தில் மந்தாகினி என்பதாகவும், ஒரு பாகம் பூமியில் பாகீரதீ, கங்கை என்பதாகவும், ஒரு பாகம் பாதாளத்தில் போகவதீ என்பதாகவும் விளங்குகிறது. அஷ்டமூர்த்தியான உமக்கு ஜலமும் ஒரு சரீரம். எனவே உமது திவ்ய சரீரத்தின் மஹிமை வர்ணிக்க இயலாததேயாகும்.

**रथः क्षोणी यन्ता शतधृतिरगेन्द्रो धमुरथो**
**स्थाङ्गे चन्द्राओं रथचरणपाणिः शर इति ।**
**दिधक्षोस्ते कोऽयं त्रिपुरतणमाडम्बरविधि**
**विधेयः क्रीडन्त्यो न खलु परतन्त्राः प्रभुधियः ॥ १ ९ ॥**

**ரத²: க்ஷோணீ யந்தா ஶதத்⁴ருதிர கே³ந்த்³ரோ த⁴னுரதோ²**
**ரதா²ங்கே³ சந்த்³ரார்க்கௌ ரத²சரணபாணி: ஶர இதி ।**
**தி³த⁴க்ஷோஸ்தே கோ(அ)யம் த்ரிபுரத்ருணமாட³ம்ப³ரவிதி⁴:**
**விதே⁴யை: க்ரீட³ந்தய: ந க²லு பரதந்தரா: ப்ரபு⁴ தி⁴ய: ॥ 18 ॥**

**அவதாரிகை:** - இந்தச் சுலோகத்தில் முப்புரம் எரித்த கதையைக் காட்டித் துதிக்கின்றார்.

**பதவுரை:** - **ஈஶ:** =இறைவனே?; **த்ரிபுரத்ருண** = முப்புரமென்னும் துரும்பை; **தி3த4க்ஷோஸ்தே** = எரிக்க விரும்பிய; **தே** = உமக்கு; **க்ஷோணீ** = பூமி; **ரத2:** = தேராகவும்; **ஶதத்4ருதி:** = பிரஹ்மதேவன்; **யந்தா** = ஸாரதியாகவும்; **அகேந்த்ரோ:** = மேருபருவதம்; **தனு:** = வில்லாகவும்; **அதோ2** = மேலும்; **சந்த்3ரார்க்கௌ** = சந்திரஸூரியர்கள்; **ரதா2ங்கே** = இரண்டு தேர்ச் சக்கரங்களாகவும்; **ரத2சரணபாணி** = சக்கரபாணியாண மஹாவிஷ்ணு; **ஶர** = பாணமாகவும் உள்ளன; **இதி** = இத்தகைய; **அதம்** = இந்த; **ஆட3ம்ப3ரவிதி4:** = ஆடம்பரகாரியமானது; **க:** = எதற்காக?; **விதே4யை:** = ஸ்வாதீனர்களான ஊழியர்களுடன் அல்லது வஸ்துக்களுடன்; **க்ரீட3ந்த்ய:** = விளையாடுகின்ற; **ப்ரபு4 தி4ய:** = எஜமானனின் ஸங்கல்பங்கள்; **பரதந்த்ரா:** = பராதீனங்களாக; **ந கலு** = ஆகாதனவன்றோ.

**கருத்துரை:** - ஓ. பரமேச்வரனே முப்புரம் என்னும் அஸுரன் உமக்குத் துரும்புக்குச் சமமானவன். அவனை நினைத்த மாத்திரத்தாலேயே நீர் எரித்து விடலாம். உலகத்திலும் நகத்தால் கிள்ளி எறிய வேண்டிய விஷயத்தில் கோடாரியை எடுப்பதில்லையே! நினைத்த மாத்திரத்தால் இம்மூவுலகையும் ஸம்ஹாரம் பண்ண சக்தி வாய்ந்த உமக்கு முப்புரத்தை எரிப்பதற்கு, பூமியை ரதமாயும், பிரஹ்மாவை ஸாரதியாகவும், மேருவை வில்லாயும், சந்திரஸூரியர்களை ரதசக்கரங்களாயும், விஷ்ணுவை பாணமாயும், வைத்துக் கொள்வது அவசியமே இல்லை; உசிதமுமில்லை. எனவே இத்தகைய யுத்த ஸாதனங்கள் யாவும் உமக்கு வீணான ஆடம்பர மாத்திரமே யன்றி வேறு பிரயோஜன மில்லை. ஆனால் பிரஹ்மாதி தேவர்களும், ஸமஸ்த வஸ்துக்களும் உமக்கு வசமாயிருப்பதால் அவற்றை விளையாட்டுக் கருவிகளாகச் செய்து கொண்டு முப்புர மெரித்தல் என்ற திருவிளையாடல் புரிகின்றீர் என்றே தோன்றுகிறது. ஸங்கல்ப மாத்திரத்தால் எதையும் செய்ய சக்தி பொருந்திய ஸ்வதந்தரரான உமக்கு இது ஒரு விளையாட்டானதால் தகாதது ஒன்றுமில்லை.

**हरिस्ते साहस्रं कमलबलिमाधाय पदयो**
**यदेकोने तस्मिन्निजमुदहरन्नेत्रकमलम् ।**
**गतो भक्त्युद्रेका परिणतिमसौ चक्रवपुषा**
**त्रयाणां रक्षायै त्रिपुरहर जागर्ति जगताम् ॥ १९ ॥**

**ஹரிஸ்தே ஸாஹஸ்ரம் கமல ப3லிமாதா4ய பத3யோ:**
**யதே3கோனே தஸ்மின் நிஜமுத3ஹரன் னேத்ரகமலம் ।**
**க3தோ ப4க்த்யுத்3ரேக: பரிணதிமஸௌ சக்ரவபுஷ:**
**த்ரயாணாம் ரக்ஷாயை த்ரிபுரஹர ஜாக3ர்த்தி ஜக3தாம் ॥ 19 ॥**

**அவதாரிகை:** - இந்தச் சுலோகத்தில் பரமேச்வரனிடம் மஹா விஷ்ணு பக்தி செலுத்தியதையும், அதனால் அவர் அடைந்த பயனையும் கூறுபவராய்த் துதிக்கின்றார்.

**பதவுரை:** - **த்ரிபுரஹர** = முப்புரமெரித்தவனே!; **ஹரி:** = மஹாவிஷ்ணு; **தே** = உமது; **பதயோ:** = திருவடிகளில்; **ஸாஹஸ்ரம்** = ஆயிரம்; **கமல பலிமாதாய** = தாமரை மலர்களால் பூஜையை; **ஆதா⁴ய** = ஸ்மர்ப்பித்து; **தஸ்மின்** = அவ்வாயிர மலரில்; **ஏகோனே** = ஒன்று குறைந்த காலத்தில்; **நிஜம்** = தனது; **னேத்ரகமலம்** = கண்தாமரையை; **உத³ஹரத்** = பிடுங்கினார்; **யது** = என்பதாகிய; **இதோ** = இந்த; **ப⁴க்த்யுத்ரேக:** = பக்தியின் முதிர்ச்சியே; **சக்ரவபுஷா** = ஸுதர்சனமென்னும் சக்கர ஸ்வரூபமான; **பரிணதிம்** = பரிணாமத்தை, அல்லது ஆறுதலை; **கதோ** = அடைந்ததாய்க் கொண்டு; **த்ரயாணாம்** = மூன்றுகளான; **ஜக³தாம்** = உலகங்களின்; **ரக்ஷாயை** = ஸம்ரக்ஷணத்தின் பொருட்டு,; **ஜாகர்த்தி** = விழித்துக் கொண்டிருக்கின்றது.

**கருத்துரை:** - ஓ பரமேச்வரனே! மஹாவிஷ்ணு ஆயிரம் தாமரை மலர்களால் உம்மை ஆராதிப்பதாக விரதம் பூண்டார். அவருடைய பக்தியைப் பரீக்ஷை செய்வதற்காக ஒரு நாள் ஆயிரம் தாமரை மலர்களில் ஒன்றை ஒளித்து வைத்தீர். உடனே மஹா விஷ்ணு தமது விரதத்திற்குத் தடை நேராமலிருப்பதற்காக வேறு தாமரை ஒன்றைத் தேடியலைந்தும் அகப்படாமற் போகவே தாமரை போன்ற தன் கண்ணையே பிடுங்கி உமது திருவடியை அர்சித்தார். அதனால் நீர் ஸந்தோஷ மடைந்து எல்லா உலகத்தையும் ரக்ஷிப்பதற்குரியதான ஸுதர்சனமென்னும் சக்கரா யுதத்தை மகா விஷ்ணுவுக்கு அருள் செய்தீர். பரமசிவன் அருளால் விஷ்ணு சக்கரா யுதத்தைப் பெற்றார் என்பது புராணப் பிரஸித்தமே. அதன் பிறகு தான் விஷ்ணுவுக்கு பாலன அதிகாரம் கிடைத்தது. விஷ்ணுவுக்கே அருள் புரிந்த பரமேச்வரன் மஹிமையை என்னவென்று நினைக்கக் கூடும்.!

**ऋतौ सुप्ते जाग्रत्त्वमसि फलयोगे ऋतुमतां**
**क कर्म प्रध्वस्तं फलति पुरुषाराधनमृते ।**
**अतस्त्वां संप्रेक्ष्य क्रतुषु फलदानप्रतिभुवं**
**श्रतो श्रद्धां बद्ध्वा कृतपरिकरः कर्मसु जनः ॥ २० ॥**

**க்ரதௌ ஸுப்தே ஜாக்³ரத் த்வமஸி ப²லயோகே³ க்ரதுமதாம்**
**க்வ கர்ம ப்ரத்⁴வஸ்தம் ப²லதி புருஷாராத⁴னம்ருதே ।**
**அதஸ்த்வாம் ஸம்ப்ரேக்ஷ்ய க்ரதுஷு ப²லதா³ன ப்ரதிபு⁴வம்**
**ஶ்ருதௌ ஶ்ரத்³தா⁴ம் ப³த்⁴வா க்³ருதபரிகர: கர்மஸு ஜன: ॥ 20 ॥**

**அவதாரிகை:** - இதுவரை பாமேச்வரனைப் பக்தி சிரத்தையுடன் பூஜை செய்வதால் தான் தர்மார்த்த காம மோக்ஷம் என்ற நான்கு புருஷார்த்தங்களும் பெறமுடியும் என்பதைக் கூறினார். இப்போது பரமேச்வரனை அபேக்ஷிக்காமல் அபூர்வமென்ற வஸ்துவே நன்மை தீமை ஆகியவற்றின் பயனைக் கொடுக்கின்றதென்ற பூர்வ மீமாம்ஸக மதத்தை மறுப்பவராய்த் துதிக்கின்றார்.

**பதவுரை:** - **த்ரிபுரஹர** = முப்புரமெரித்தவனே!; **க்ரதௌ** = யஜ்ஞ கர்மாவானது; **ஸுப்தே** = நசித்த போது; **க்ரதுமதாம்** = யஜ்ஞம் செய்கின்ற எஜமானர்களுக்கு; **ப[2]லயோகே[3]:** = பிரயோஜனத்தை அளிப்பதற்காக; **த்வம்** = நீர்; **ஜாக்[3]ரத்** = விழிப்புற்றவராய்; **அஸி** = இருக்கிறீர்; **ப்ரத்[4]வஸ்தம்** = நஷ்டமான; **கர்ம** = கர்மாவானது; **புருஷாராத[4]னம் ருதே** = பரமேச்வர பூஜையில்லாமல்; **க்வ ப[2]லதி** = எங்ஙனம் பயன் கொடுக்கும்; **அத:** = ஆகையாலேயே; **க்ரதுஷு** = யஜ்ஞாதிகர்மாக்களில்; **ப[2]லதான ப்ரதிபு[4]வம்** = பயனைக் கொடுப்பதற்குச் சாக்ஷியாக; **த்வாம்** = உம்மை; **ஸம்ப்ரேக்ஷ்ய** = நிச்சயித்துத் கொண்டு; **ஜன:** = கர்மாதிகாரியான புருஷன்; **ஶ்ருதௌ** = வேதவாக்கியத்தில்; **ஶ்ரத்[3]தா[4]ம்** = பிராமாண்ய நம்பிக்கையை; **ப[3]த்[4]வா** = வைத்து; **கர்மஸு** = கர்மாக்களில்; **க்ருதபரிகர:** = திடமாய் பிரவிருத்திக்கிறான்.

**கருத்துரை:** - ஓ பரமேச்வரனே! யஜ்ஞாதி கர்மாக்கள் நசிக்கும் தன்மை யுள்ளதால் நசித்து விட்டபோது, யஜமானர்களுக்கு வெவ்வேறு தேச காலங்களில் அடையப்படும் பிரயோஜனத்தைக் கொடுப்பதற்காக நீர் எப்போதும் விழித்துக் கொண்டிருக்கிறீர். சேதனான புருஷன் ஒருவன் இல்லாமல் போனால் நஷ்டமான கர்மா அசேதனமாயிருப்பதால் எங்ஙனம் பயனைக் கொடுக்கும்? இதனாலேயே கர்மாக்களைச் செய்கிறவர்களுக்குப் பயனைக் கொடுப்பதற்காக ஸர்வஜ்ஞனான உம்மை ஸாக்ஷியாக வைத்து வேதப்பிராமாண்ய புத்தியுடன் கர்மாக்களை அனுஷ்டிக்கின்றனர். இங்கு இது தாத்பர்யம். கர்மாக்கள் யாவும் நசிக்குந்தன்மையுள்ளதால் வெவ்வேறு காலதேசங்களில் அனுபவிக்கப்படும் பிரயோஜனத்தைக் கொடுக்காமல் போனாலும், அந்தக் கர்மாக்களினின்றும் உத்பத்தியடைந்த நித்தியமான அபூர்வம் என்ற வஸ்து பிரயோஜனத்தைக் கொடுக்க லாமென்று பூர்வ மீமாம்ஸ்கர் கருதுகின்றனர். இது சரியில்லை கர்மாக்களோ, அபூர்வங்களோ இவை யாவும் ஜடமானதால் பிரயோஜனத்தைக் கொடுக்க மாட்டாது. உலகத்தில் கர்மாக்களோ அபூர்வங்களோ பயனைக் கொடுப்பதாகக் கண்டதில்லை. உலகத்தை அனுஸரித்தே வைதிக கர்மாக்களிலும் கூற வேண்டும். உலகில் அரசன், பிரபு முதலிய சேதனன் தான் கர்ம பயனைக் கொடுப்பதாகக் கண்டுள்ளோம். இதற்கு மாறாகக் கூறுவது சரியில்லை. அபூர்வம் வேறொரு காரணத்தையும் அபேக்ஷிக்காமல் பிரயோஜனத்தைக் கொடுக்கிறதென்று சொல்ல முடியாது. உலகில் சரீர இந்திரியாதிகளுடன் சேர்ந்தே சுக துக்க அநுபவம் கண்டிருப்பதால் சரீரேந்திரி யாதிகளை அபேக்ஷித்துத்தான் அபூர்வம் பிரயோஜனத்தை அளிப்பதாக மீமாம்ஸகர்கள். ஒப்ப வேண்டும். எனவே சரீரேந் திரியாதிகளை அபேக்ஷிப்பது போல் பரமேச்வரனையும் அபேக்ஷித்தே அபூர்வம்

பயனைக் கொடுப்பதாக ஏன் ஒப்பக்கூடாது? உலகிலும் அங்ஙனமே காணப்படுகிறது. பரமேச்வரன் இல்லை என மறுப்பதைக் காட்டிலும், அபூர்வத்திற்கு ஸ்வதந்தரத்தன்மை இல்லை என்று மறுப்பது தான், **தா[4]ர்மி பா[3]தா[4]த்[3]வரோ த[4]ர்மவாத[4]:** - என்ற நியாயத்திற்குப் பொருத்தமானது. தவிர பரமேச்வரனைக் கூறும் சாஸ்திரங்களுக்கும் அப்பிராமாண்யம் கூறுவது உசிதமில்லை. இதைத்தான் பிரஹ்ம ஸூத்ரத்தில், **ப[2]லமத உபபதே:** - என்ற அதிகரணத்தில் ஸ்ரீ வியாஸாசார்யர் ஸித்தாந்தப்படுத்தியிருக்கிறார். இந்த ஸூத்திரத்தில் பூர்வமீமாம்ஸகர் கூறும். அபூர்வமென்பதை அங்கீகரித்து அதை அபேக்ஷித்து பரமேச்வரன் கர்மபயனை ஜீவர்களுக்குக் கொடுப்பதாகக் கூறியுள்ளது. வாஸ்தவத்தில் அபூர்வமென்ற வஸ்துவை அங்கீகரிக்கப் பிரமாணம் யாதொன்றுமில்லை. பரமேச்வரனை அபூர்வ ஸ்தானத்தில் அங்கீகரிப்பது தான் பிரமாணஸித்தமாகும். அபூர்வத்தையும், அந்தந்தப் பயனைக் கொடுக்கும் சக்தியையும் அபூர்வ வாதிகள் அவச்யம் அங்கீகரிக்க வேண்டும். ஈச்வரவாதகளுக்கு ஈச்வரனை மட்டும் அங்கீகரித்தால் போதுமானது. கர்ம பயனைக் கொடுக்கும் சக்தியை பரமேச்வரனுக்குக் கற்பிக்க வேண்டியதில்லை. அது உலகத்தில் பிரஸித்தமானதே. அவரவர் கர்மாவை அனுஸரித்து ஈச்வரன் பயனைக் கொடுப்பதாக ஸ்வீகரிப்பதால் வைஷம்யாதி தோஷங்களுக்கும் ஈச்வரனிடம் ப்ரஸக்தி யில்லை. இதனாலேயே ஆஸ்திகர்களான கர்மாதிகாரிகள், பரமேச்வரனைத் தெரிவிக்கின்ற, **"ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஷாஸனே" "கர்மாத்[4]யக்ஷஸ்ஸர்வ பூ[4]தாதி[4]வாஸ:" "ஏஷ ஹோவ ஸாது[4] கர்ம கார்யதி" "ஏஷ ஹோவா ஸாது[4] கர்ம கார்யதி"** - என்பதான சுருதிகளில் அப்பிராமாண்ய புத்தி செலுத்தாமல் தேவதாதிகரண நியாயத்தால் பிராமாண்ய புத்தியைச் செலுத்தி, தான் செய்யும் கர்மாக்களுக்கு ஸாக்ஷியாக (ஜாமீனாக) ஈச்வரனைக் கருதி கர்மாக்களைச் செய்கின்றனர். இதை, **ப[2]லதா3னப்ரதிபு[4]வம்** - என்ற பதம் தெரிவிக்கின்றது. கடன் கொடுக்கிற புருஷனொருவன் கடன் வாங்கிய புருஷன் இறந்தாலும், ஓடினாலும், ஜாமீன் நின்ற புருஷனிடமிருந்து கடன் பணத்தைப்பெற்றுக் கொள்ளலாமென்று கருதி ஒரு மத்யஸ்த புருஷனை ஸாக்ஷியாக (ஜாமீனாக) வைத்துக் கடனாளிக்குத் தன் பணத்தைக் கொடுப்பதுபோல் கடனாளி போன்ற கர்மாக்கள் பிரயோஜன மென்ற பணத்தைக் கொடுக்காமல் நசித்து விட்டாலும் ஜாமீன் புருஷன் போன்ற பரமேச்வரனிடமிருந்து அதைப் பெற்றுக் கொள்ளலாம் என்று கருதி, கடன் கொடுக்கின்றவன் போன்ற கர்மாதிகாரி புருஷன் சங்கையின்றிக் கர்மாக்களை அனுஷ்டிக்கின்றான் என்று கருத்து.

**क्रियादक्षो दक्षः क्रतुपतिरधीशस्तनुभृतां**
**ऋषीणामार्त्विज्यं शरणद सदस्याः सुर-गणाः ।**
**क्रतुभ्रंशस्त्वत्तः क्रतुफल-विधान-व्यसनिनः**
**ध्रुवं कर्तुं श्रद्धा विधुरमभिचाराय हि मखाः ॥ २१॥**

**க்ரியாத[3]க்ஷோ த[3]க்ஷ: க்ரதுபதிரதீ[4]ஶஸ்தனுப்[4]ருதாம்**
**ருஷீணாமார்த்விஜ்யம் ஶரணத[3] ஸத[3]ஸ்யா: ஸுர-க[3]ணா: ।**
**க்ரதுப்[4]ரம்ஶஸ்த்வத்த: க்ரதுப[2]ல-விதா[4]ன-வ்யஸநின:**
**த்[4]ருவம் கர்து: ஶ்ரத்[3]தா[4]-விது[4]ரமபி[4]சாராய ஹி மகா[2]: ॥ 21 ॥**

**அவதாரிகை:** - பூர்வகலோகத்தால் பரமேச்வரன் பிரஸாதத்தாலேயே நன்மைப் பயன்கள் ஏற்படுகின்றனவேயன்றி தர்ம அபூர்வத்தால் இல்லை என்று நிரூபிக்கப்பட்டது. இந்தச் சுலோகத்தில் பரமேச்வரன் பிரஸாதத்தால் தீமைப் பயன் உண்டாவதாகச் சொல்லக் கூடாததால் அதர்மமென்னும், அபூர்வத்தை அவசியம் ஈச்வரவாதிகளும் அங்கீகரித்தேயாக வேண்டுமென்று ஆசங்கித்து, அரசன் ஆஜ்ஞையை மீறினால் அநேக அனர்த்த மேற்படுவது போல் ஈச்வரன் ஆஜ்ஞயை மீறினால் அநேக அனர்த்தமேற்படும் என்று கூறித் துதிக்கின்றார்:

**பதவுரை: - ஸரணத**[3]! = அபயமளிப்பவனே?; **க்ரியாதக்ஷோ:** = கர்மாக்களை அனுஷ்டிப்பதில் ஸமர்த்தனும்; **தனுப்ருதாம்** = பிரஜைகளுக்கு; **அதீஸ:** = பதியுமாகிய (பிரஜாபதியுமாகிய); **த**[3]**க்ஷ:** = தக்ஷன் என்பவன்; **க்ரதுபதி** = யஜ்ஞுத்திற்கு யஜமானன்; **ரிஷிணான்** = பிருகு முதலிய மகரிஷிகளுக்கு; **ஆர்த்விஜ்யம்** = ருத்விக்குக் காரியம்; **ஸுரக**[3]**ணா** = பிரஹ்மாதிதேவர்கள்; **ஸத**[3]**ஸ்யா:** = ஸபையினர்; (**ஏவம் ஸத்யபி** = இங்ஙனம் ஸாமக்கிரிகளால் சிறப்புற்று இருப்பினும்), **க்ரதுப**[2]**ல-விதா**[4]**ன-வ்யஸநின:** = யாகப்பிரயோஜனத்தைத் தருவதிலேயே கவலையுள்ள; **த்வத்த:** = உம்மிடமிருந்தே; **க்ரதுப்ரேஷஸ்** = அந்த யாகத்திற்கு நாசமானது; (**அபூ**[4]**த்** = ஏற்பட்டது), **ஹி** = ஏனெனின்?, **ஶ்ரத்**[3]**தாவிதுர** = பரமேச்வரனிடம் சிரத்தை பக்தி இல்லாமல் செய்த; **மகா**[2]**:** = யாகங்கள்; **கர்து:** = யஜமானனுக்கு; **அபி**[4]**சாராய** = நாசத்தின் பொருட்டே ஆகின்றனவென்பது; **த்**[4]**ருவம்** = நிச்சயமன்றோ?

**கருத்துரை:** - பிரஜாபதியாயும், கர்மாக்களைச் செய்வதில் நிபுணனுமான தக்ஷன் ஆரம்பித்த யாகமானது எல்லா ஸாதனங்களும் நிரம்பப் பொருந்தி இருந்தாலும், கர்மாக்களின் பயனைத் தரும் உங்களை இகழ்ந்தும் மறந்தும் உமது அனுக்ரஹத்தை அடையாததால் சிதறுண்டு நாசமுற்றது. எல்லோருக்கும் யாக பலனை யளிக்கும் நீரே தக்ஷயாகத்தை அழித்தீர். ஏனெனின் உம்மிடம் தக்ஷனுக்குப் பக்தி இல்லாமலிருந்ததுமன்றித் துவேஷமும் ஏற்பட்டிருந்தது தான் காரணமாகும். பரமேச்வரனிடம் சிரத்தை பக்தியின்றி யாகத்தை அனுஷ்டிக்கும் யஜமானர்களுக்கு நாசமேற் படுவது நிச்சயமன்றோ!

**प्रजानाथं नाथ प्रसभमभिक स्वां दुहितरं**
**गत रोहिद्भूतां रिरमयिषुमृष्यस्य वपुषा ।**
**धनुः पाणेर्यात दिवमपि सपत्राकृतम,**
**वसन्तं तेऽद्यापि त्यजति न मृगव्याधरभसः ॥ २२ ॥**

**ப்ரஜாநாத**[2]**ம் நாத**[2] **ப்ரஸப**[4]**மபி**[4]**கம் ஸ்வாம் து**[3]**ஹிதரம்**
**க**[3]**தம் ரோஹித்**[3]**பூ**[4]**தாம் ரிரமயிஷும் ருஷ்யஸ்ய வபுஷா ।**
**த**[4]**னு: பாணேர்யாதம் தி**[3]**வம்பி ஸபத்ராக்ருதமமும் ।**
**த்ரஸத்தம் தே(அ)த்**[3]**யாபி த்யஜதி ந ம்ருக**[3]**வ்யாத**[4] **ரப**[4]**ஸ:** ॥ 22 ॥

**அவதாரிகை:** - பிரஹ்மதேவனைத் தண்டித்த கதையைக் கூறுபவராய்த் துதிக்கின்றார்.

**பதவுரை:** - **நாத**[2]! = ஐயனே!; **ரோஹித்பூதாம்** = பெண் மான் ரூபம்தரித்த; **ஸ்வாம் து**[3]**ஹிரதம்** = தன் பெண்ணை; **ருஷ்யஸ்ய** = ஆண்மானுடைய, **வபுஷா** = ஸ்வரூபத்தால்; **ரிரமயிஷும்** = இரமிக்க ஆசைகொண்டவரும்; **ப்ரஸப**[4]**ம்** = பலாத்காரமாக; **க**[3]**தம்** = அடைந்தவனும்; **அமபி**[4]**கம்** = காமுகனும்; **திவ** = ஸ்வர்க்கத்தை; **யாத மபி** = அடைந்தவனும்; **ஸபத்ராக்ருத** = பரணபிரவேசத்தால் துக்கித்தவனும்; **த்ரஸந்தம்** = பயப்படுகிறவனுமான; **அம்** - இந்த; **ப்ரஜாநாதம்** = பிரஹ்மாவை; **தனு: பாணேர்:** - (பினாகமென்னும்) வில்லைக் கையில் உடையவனான; **தே** - உமது; **ம்ருகவ்யாத ரபஸ:** - வேடனின் வேட்டையாடும் உத்ஸாஹம் (பாணம்), **அத்யாபி** =இப்பொதும், **ந த்யஜதி** - விடவில்லை.

**கருத்துரை:** - பிரஹ்மா மிக அழகு வாய்ந்த ஸந்தி என்பவளைச் சிருஷ்டித்து அவளை அனுபவிக்க எண்ணங் கொண்டார். தகப்பனார் என்பதால் அவள் இஷ்டப்படவில்லை. பலாத்காரம் பண்ண பிரஹ்மா முயன்றார். அவள் வெட்கங்கொண்டு பெண் மான் உருவம் எடுத்துக் கொண்டாள். பிரஹ்மாவும் ஆண்மான் உருவமடைந்து அவளைத் தொடர்ந்து ஓடினார். பரமேச்வரன் இதைப் பார்த்து "எல்லோரையும் தர்ம மார்க்கத்தில் பிரவிருத்திக்கும்படி செய்கின்றவ னாயிருந்தும் வெறுக்கத்தக்கக் காரியத்தை இவர் செய்வது பெரும் பாபமானதால் இவரைச் சிக்ஷிக்க வேண்டுமென்று கருதி பினாகத்தில் பாணத்தைத் தொடுத்தார். அப்பாணத்தால் பிரஹ்மா துன்பத்தையும் வெட்கத்தையும் அடைந்து மிருகசீர்ஷ நக்ஷத்திரமாக மாறினார். பரமேச்வரனது பாணமும் திருவாதிரை நக்ஷத்திரமாக உருவெடுத்து பிரஹ்மாவின் பின் பக்கத்தில் நின்றது. இதனாலேயே இப்போதும் மிருகசீர்ஷ நக்ஷத்திரமும் திருவாதிரை நக்ஷத்திரமும் சேர்ந்தே இருக்கிறது. **ஸபத்ராக்ருதம்** - என்பதால் சேர்ந்திருப்பது தான் சொல்லப்பட்டிருக்கிறதே யொழிய பாணத்தால் அடித்ததைச் சொல்லப்படவில்லை.

**स्वलावण्याशंसाधृतधनुषमहाय तृणवत्**
**पुरः प्लुष्टं दृष्ट्वा पुरमथन पुष्पायुधमपि ।**
**यदि स्त्रैणं देवी यमनिरत देहार्धघटना**
**दवैति त्वामद्धा बत वरद मुग्धा युवतयः ॥ २३ ॥**

**ஸ்வலாவண்யாமம்ஸாத்**[4]**ருத த**[4]**னுஷமஹ்னாய த்ருணவத் ।**
**புர: ப்லுஷ்டம் த்**[3]**ருஷ்ட்வா புரமத**[2]**ன புஷ்பாயுத**[4]**மபி ।**
**யதி**[3] **ஸ்த்ரைணம் தே**[3]**வீ யமநிரத-தே**[3]**ஹார்த**[4]**-க**[4]**டனாத்**
**அவைதி த்வாமத்**[3]**தா**[4] **ப**[3]**த வரத**[3] **முக்**[3]**தா**[4] **யுவதய: ॥ 23 ॥**

**அவதாரிகை:** - இந்தச் சுலோகத்தில் ஜிதேந்திரியர்களுக்குள் சிரேஷ்டரான பரமேச்வரன் உமாதேவியினிடம் கருணையால் காமுகன் போல் காணப்படுகின்றார் என்று துதிக்கின்றார்.

**பதவுரை:** - **புரமதன** = முப்புர மெரித்தவனே?; **யமநிரத** = யோகநிஷ்டனே?; **வரத** = வரமளிப்பவனே?; **ஸ்வலாண்யாஸம்ஸரத்ருததனுஷ** = தனது (உமாதேவியின்) அழகைக் கொண்டு (ஜயிக்கலாமென்ற) ஆசையால் வில்லைக் கையிலேந்திய; **புஷ்பாயுதம்** = மன்மதனை; **த்ருணவத்** = துரும்பு போன்று; **அஹ்னாய** = சீக்கிரத்தில்; **ப்லுஷ்டம்** = எரித்ததை; **புர** = நேரில்; **த்ருஷ்ட்வாபி** = கண்டும் கூட; **தேவீ** = உமாதேவி; **தேஹார்த்த கடனாத்** = பாதி சரீரத்தில் சேர்த்துக் கொண்ட காரணத்தால்; **த்வாம்** = உம்மை; **ஸ்த்ரைணம்** = ஸ்திரீவசனாக; **அவைதி** = நினைத்தாளானால்; **அத்தா** = அது யுக்தமே; **யுவதய** = தருணஸ்தீரிகள்; **முக்தா** = மூடர்களன்றோ?; **பத** = கஷ்டம்.

**கருத்துரை:** - தாக்ஷாயணீ தன் தந்தையின் கோபத்தால் சரீரத் தியாகம் செய்தது முதற்கொண்டு வேறுஸ்திரீயை மணந்து கொள்ளாமல் ஹிமயமலையின் அடிவாரத்தில், 'கேநாபி காமோ தபஸ்சசார' என்று கூறியவிதமாக பரமேச்வரன் மௌனியாய் யோக ஸமாதிலிருந்துவிட்டார். தாக்ஷாயணியும் ஹிமவானுக்குப் புத்திரியாக உமா என்ற பெயருடன் அவதரித்து வளர்ந்து வந்தாள். தேவர்களின் ஆஜ்ஞையால் மன்மதன் உமாதேவியை பரமேச்வரனுக்கு விவாஹம் செய்து வைப்பதற்காகப் பரமேச்வரனின் இருப்பிடம் வரவே, அவரது ஸமாதி நிலையைக் கண்டு நடுக்கமுற்று நழுவிய வில்லுடன் கீழே மயங்கி விழுந்தான். அப்போது உமாதேவியும் அங்கே வந்தாள். மயங்கிக் கிடந்த மன்மதன் உமாதேவியின் ஸௌந்தர்யத்தைப் பார்த்துவிட்டு, அவளுடைய ஸௌந்தர்யத்தால் பரமேச் வரனையும் ஜயித்து விடலாமெனக் கருதி, கை நழுவிய வில்லைக் கையிலேந்தித் தைரியமாய் ஸம்மோஹன மென்னும் புஷ்பபாணத்தைப் பரமேச்வரனிடம் பிரயோகித்தான். பரமேச்வரன் கொஞ்சம் தைரிய மிழந்தவராய் அதன் காரணம் காணவேண்டி, கண்களைத் திறந்து மன்மதனைப் பார்த்ததும், கோபங்கொண்டு மூன்றாவது கண்ணால் எரித்ததும் ஒரே காலத்திலேற்பட்டு மன்மதன் சாம்பலாய்ப் போனான். இதை நேரில் பார்த்துக்கொண்டிருந்த உமாதேவி தனது ஸௌந்தர்யம் வீணானதைக் குறித்து வெட்க வேறு உபாயங்களால் பரமேச்வரனை யடைய முடியாதென நிச்சயித்துக் கடுந் தவம் செய்தாள். உமாதேவியின் தபஸால் ஸந்தோஷ மடைந்த பரமேச்வரன் கருணையால் தமது பாதி சரீரத்தை உமாதேவிக்குக் கொடுத்து அர்த்தநாரீச்வரரானார். இங்ஙனமிருக்கையில் தனது ஸௌந்தரியத்திற்கு மயங்கிப் பரமேச்வரன் பாதி சரீரத்தைத் தனக்குக் கொடுத்தார் என்றும், அதனால் அவர் காமுகன் போல் தன் வசப்பட்டவரென்றும் உமாதேவி ஒருகால் நினைத்தாளானால் அது உமாதேவிக்கு உசிதமே. ஏனெனில் தருண ஸ்திரிகளுக்கு அனேக ஆபரணங்களுக்குள் மடமையும் ஒன்றன்றோ? எனவே சித்ரூபிணியாயுள்ள உமாதேவியும் ஸ்திரீகளின் இயற்கையாயுள்ள மடமையை அனுஸரித்து வேஷம் போடுவதால் அவ்விதம் நினைப்பது பொருத்தமானதே. இந்தச் சுலோகத்தில் மன்மதனை எரித்த பரமேச்வரன் அர்த்தநாரீச்வரருமானார் என்று

கூறுவதன் மூலம் பரமேச்வர னொருவனே யோகதத்வ ரஹஸ்யம் உணர்ந்தவர் என்ற மஹிமை கூறப்பட்டுள்ளது. மஹாகவி ஸ்ரீ காளிதாஸன் இவ்விஷயத்தை "**காந்தா ஸம்மிக்ஷ தே3ஹோவ்ய விஷய மனஸாம் ய: பரஸ்தாத் க4தினாம்**" என்று கூறியுள்ளான்.

**स्मशानेप्वाक्रीडा स्मरहर पिशाचा : सहचरा**
**श्चिताभस्मालेपः स्रगपि नृकरोटीपरिकरः ।**
**अमङ्गल्यं शीलं तव भवतु नामैवमखिलं**
**तथापि स्मर्तृणां वरद परमं मङ्गलमसि ॥ २४ ॥**

**ஶ்மஶானேஷ்வாக்ரீடா3 ஸ்மரஹர பிஶாசா: ஸஹசரா:**
**சிதா-ப4ஸ்மாலேப: ஸ்ரக3பி ந்ருகரோடீ-பரிகர: ।**
**அமங்க3ல்யம் ஶீலம் தவ ப4வது நாமைவமகி2லம் ।**
**ததா2பி ஸ்மர்த்ருணாம் வரத3 பரமம் மங்க3ளமஸி** ॥ 24 ॥

**அவதாரிகை:** - இந்தச் சுலோகத்தில் பரமேச்வரன் அமங்கல சீலராய் திருவிளையாடல் புரிந்த போதிலும், பக்தர்களுக்கு மங்கள ஸ்வரூபமாய் ஸர்வ மங்களங்களையும் கொடுக்கின்றார் என்று துதிக்கின்றார்.

**பதவுரை: - ஸ்மர ஹர:** = மன்மதனை எரித்தவனே?; **வரத** = இஷ்டங்களை அளிப்பவனே?; **ஶ்மஶானேஷு** = மயானங்களில்; **ஆக்ரீடா3** = விளையாட்டு; **பிஶாசா:** = பேய்கூட்டங்கள்; **ஸஹசரா:** = தோழர்கள்; **சிதாப4ஸ்மா** = சிதைச் சாம்பலே; **ஆலேப** = சரீரப்பூச்சு; **ந்ரு:கரோடீ பரிகர:** = மனிதரின் மண்டையோட்டுக் கூட்டமே; **ஸ்ரகபி** = மாலையும்; **ஏவாம்** = இவ்வண்ணமாக; **தவ** = உமக்கு, **அகி2லம்** = எல்லா; **ஶீலம்** = ஸ்வபாவமும் அல்லது ஆசாரமும்; **அமங்க3ல்யம்** = அமங்களமாக; **ப4வது நாம** = இருந்தாலு மிருக்கட்டும்; **ததா2பி** = அப்படியிருந்தபோதிலும்; **ஸ்மர்த்ருணாம்** = உம்மை நினைக்கும் பக்தர்களுக்கு; **பரமம்** = சிரேஷ்டமான; **மங்க3ளம்** = கலியாண ஸ்வரூபராக; **அஸி** = இருக்கிறீர்.

**கருத்துரை:** - ஓ பரமேச்வரனே? நீர் ச்மசானத்தில் பிசாசுகளுடன் சிதைச் சாம்பலைப் பூசிக்கொண்டு மண்டையோடு மாலை அணிந்து உலக விலக்ஷணமாக விளையாடுவதால் அமங்கள சீலராகத் தோன்றுகிறீர். இதனாலேயே சிலர் உம்மை அமங்கள தேவதை என வாஸ்வமாகக் கருதி மங்களம் விரும்புவர்கள் தியானிக்கக் கூடாதென்று கூறுகிறார்கள். இது பிதற்றலேயாகும். அவர்கள் கூறும் விதமாக நீர் அமங்கள சீலரென்று அங்கீகரித்தபோதிலும் உம்மை உள்ளன்புடன் தியானிக்கும் பக்தர்களுக்கு நீர் மங்கள ரூபியாய் தோன்றி மங்களம் எல்லாவற்றையும் அளிக்கிறீரன்றோ? தவிர விஷயங்களில் ராகத்வேஷமுள்ள ஜனங்களுக்குத்தான் மங்கள ஆசாரம் அவச்யம் வேண்டும். ஆசையற்று ஆப்தகாமனாய் உள்ள உமக்கு

மங்களமாகவோ, அமங்களமாகவோ எவ்விதம் இருந்தாலும் தோஷமில்லை. இவ்விஷயத்தை மஹாகவி ஸ்ரீ காளிதாஸன்.

**विपत्प्रतीकारपरेण मङ्गलं निषेव्यते भूतिसमुत्सुकेन वा ।**
**जगच्छरण्यस्य निराशिषस्सतः किमेमियशोपहतात्मवृत्तिभिः ॥**

**விபத் ப்ரதீகார பரேணமங்கலம் நிஷேவ்யதே பூதி ஸமுத்ஸுகேந வா**
**ஜகத் சரண்யஸ்ய நிராஶிஷஸ் ஸத: கிமேபி ராஶோபஹதாத்ம விருத்திபி: ||**

என்ற சுலோகத்தில் கூறியிருக்கிறான்.

**मनः प्रत्यचित्ते सविधमवधायात्तमरुतः**
**प्रहष्यद्रोमाणः प्रमदसलिलोत्सङ्गितदृशः ।**
**यदालोक्याह्लादं हद इव निमज्ज्यामृतमये**
**दधत्यन्तस्तत्त्वं किमपि यमिनस्तत्किल भवान् ॥ २५ ॥**

**மன: ப்ரத்யக் சித்தே ஸவித4மவிதா4யாத்த-மருத:**
**ப்ரஹ்ருஷ்யத்3ரோமாண: ப்ரமத3-ஸலிலோத்ஸங்கி3த-த்3ருஶ: |**
**யதா3லோக்யாஹ்லாத3ம் ஹ்ரத3 இவ நிமஜ்யாம்ருதமயே**
**த3த4்யந்தஸ்தத்வம் கிமபி யமினஸ் தத் கில ப4வான் || 25 ||**

**அவதாரிகை:** - முன்பு **மதித: பந்தா2னம்** - என்ற சுலோகத்தில் மூன்று வஸ்து உபன்யஸிக்கப்பட்டிருக்கிறது. **கதிவித4குண:** என்னும் பாகத்தால் ஸகுணபிரஹ்மமும், **கஸ்ய விஷய:** - என்ற பாகத்தால் அத்வைத நிர்குண பிரஹ்மமும், **பதே3த்வர்வாசீனே** - என்ற பாகத்தால் லீலாவதார ஸ்வரூபமும் கூறப்பட்டுள்ளன. **அஜன்மானா லோகா:** - என்ற சுலோகத்தில் பரமேச்வரன் ஒருவன் இருக்கிறா னென்பதைக் கூறிவிட்டு, **தவைஷ்வர்யம் யத்னாத்து3பரி** - என்ற சுலோகத்தில் ஸகுண பிரஹ்மமும், லீலாவதாரமும் வர்ணிக்கப் பட்டன. அத்வைத நிர்குண பிரஹ்மத்தைச் சொல்ல வேண்டியது பாக்கியா யிருக்கிறது. சுருதி ஸ்மிருதிகளுக் கெல்லாம் அத்வைத நிர்குண பிரஹ்மத்தைக் கூறுவதில் தான் முக்கிய தாத்பர்யமிருப்பதால் அதைச் சொல்லாவிட்டால் உமியைக் கடிப்பதுபோல் மற்ற ஸகுணாதி ஸ்வருபத்தைக் கூறுவது நிஷ்பிரயோஜனமே யாகும். எனவே அத்வைத நிர்குண பிரஹ்மத்தைக் கூறுவதற்காக இப்போது ஆரம்பிக்கின்றார். பூர்வ சுலோகத்தில் **பரமம் மங்க3லமஸி** என்று கூறியதில் ஒரு ஆசங்கை ஏற்படுகிறது. அதாவது மங்கள மென்பது சுகமாகும். பரமேச்வரனை சுகரூப ரென்று கூறமுடியாது. சுக மென்பது அநித்தியமாயும் குணமாயும் உள்ளது. பரமேச்வரனோ நித்தியர், திரவ்யமில்லாதவர். நித்தியர் அநித்ய சுகரூபமாயிருத்தல் சரியன்று. எனவே பரமேச்வரன் சுகரூபரும், சுகத்திற்கு ஆச்ரயரும் ஆகமாட்டார். அவரிடம் நித்திய ஞானமும், நித்திய இச்சையும், நித்தியப் பிரயத்தனமும் தானிருக்கின்றன என்று தார்க்கிகர் கூறுகின்றனர். கிலேச கர்மாதிகள் இல்லாத புருஷனே ஈச்வர னென்றும்,

அவர் சித்ரூபனே யன்றி சுகரூபியன்று என்றும் பாதஞ் ஜல யோகிகளும் கூறுகின்றனர். ஆகவே அத்விதீயனாயும் பரமானந்த ரூபியாயுமுள்ள பரமேச்வரனை இவ்வாறு கூறுவது யுக்தமில்லை என்று ஆசங்கித்து இந்தச் சுலோகத்தில் அத்விதீய பரமானந்த ஸ்வரூபன் பரமேச்வரன் என்பதை ஞானிகளின் அனுபவ ரூபப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் கூறுபவராய்த் துதிக்கின்றார்.

**பதவுரை:** - **வரத** = வரம் தரும் வள்ளலே!; **ப்ரத்யக்** = உள்நோக்கிய; **மன:** = மனசை; **சித்தே** = ஹிருதய பத்மத்தில்; **ஸவித$^{4}$ம்** = யமநியமாதி ஸாதனங்களுடன் கூடியிருக்கும்படி; **அவதா$^{4}$யா** = (விருத்தி சூன்யமாய்) நிலைநிறுத்தி; **ஆத்த மருத:** = பிராணாயாமம் செய்கிறவர்களாய்; **யது** = எந்த; **கிமபி** = அநிர்வாச்யமான; **த்வம்** = வஸ்துவை; **அந்த்** = உள்ளில்; **யதாலோக்யா** = ஸாக்ஷாத்கரித்து; **ப்ரஹ்ருஷ்யத் ரோமாண** = மயிர்ச்சிலிர்ப்புடையவர்களாய்; **ஸலிலோத்ஸங்கித த்$^{3}$ருஸ:** = ஆனந்த பாஷ்யம் நிரம்பிய கண்களையுடையவர்களாய்; **யமின:** = யோகிகள் அல்லது ஸந்யாஸிகள்; **அம்ருதமயே** = அமிருதமயமான; **ஹ்ரத** = ஆழ்ந்தமடுவில்; **நிமஜ்ஜ்யா** = முழுகினது போன்று; **ஆஹ்லாதம்** = பரமானந்தத்தை; **ததத்** = தரிக்கின்றனரோ; **தது** = அவ்வஸ்து; **ப$^{4}$வான் கில** = நீர் அன்றோ?

**கருத்துரை:** - ஓ பரமேச்வரனே! வெளி விஷயங்களில் போகும் ஸ்வபாவமுள்ள மனசை.அந்தர் முகமாய் செய்து பதஞ்ஜலி பகவான் கூறிய யமநியமாதி ஸாதனங்களுடன் துரீய கும்பக ப்ராணாயாம அப்யாஸத்தால் அம் மனசை ஸங்கல்ப விகல்பங்களின்றி ஹ்ருதபாகாசத்தில் நிலைக்கச் செய்து நிர்விகல்ப ஸமாதி தசையில் அகண்டாகார விருத்தி ஞானத்தால் ஸத்ய ஞானாநந்தாத்வைத நிர்குண சிவஸ்வரூபமான எந்தத் தத்துவத்தை ஸாக்ஷாத்கரித்து ஞானிகளும், யோகிகளும் அமிருத தடாகத்தில் முழுகினவர்கள் போல், புளகாங்கிதர்களாய் ஆனந்த பாஷ்பம் சொரியும் கண்கள் உள்ளவர்களாய் நிரதிசயாநந்தத்தை அடைகின்றனரோ, அந்த வஸ்து நீரே யாவீர். முதலாவது பாதத்தால் அஷ்டாங்க யோகவடிவ நிதித்யாஸநம் பிரஹ்மஞானத்திற்கு அந்தரங்க ஸாதனமென சொல்லப்பட்டுள்ளது. **அந்தராஹ்லாத$^{3}$ம் த$^{3}$த$^{4}$தி** - என்றதால் விஷயசுக விலக்ஷண சுகம் தெரிவிக்கப் பட்டது. அந்த சுகம் உத்பத்தி யடைவதில்லை என்பதை, **த$^{3}$த$^{4}$தி** - என்ற கிரியாபதம் ஸூசிப்பிக்கிறது. **தத் கில ப$^{4}$வான்** - என்றதால் பரமேச்வரன் அத்வை தானந்த ஸ்வரூபன் என்பதற்கு சுருதிப் பிரஸித்தி சொல்லப் பட்டது. சுருதிகளில் ஸச்சிதாநந்த ரூபனாகப் பரமேச்வரனைக் கூறியிருப்பதால், தார்க்கிகர், பாதஞ்ஜலயோகிகள் முதலியோர் கூறும் பக்ஷம் ஸரியில்லை என்று ஸித்தித்தது. இரண்டாவது பாதத்தில் யோகிகளுக்கு நிரதிசயானந்த அனுபவம் உண்டென்பதற்கு அடையாளம் காட்டப்பட்டது. எந்த வஸ்துவை ஸாக்ஷாத்கரித்த மாத்திரத்திலேயே நிரதிசயானந்தம் யோகிகளுக்கு ஏற்படுமோ, அந்த வஸ்து நிரதிசயாநந்த ஸ்வரூபம் என்பதில் ஸந்தேகமேற்பட இடமில்லை என்று கருத்து.

மூன்றாவது பாதத்தில் பிரஹ்மானந்த திருஷ்டாந்தம் கூறியுள்ளது. பிரஹ்மாநந்தத்திற்கு யாதொரு திருஷ்டாந்தமும் கூறமுடியா தென்றாலும் சிறிது ஸாம்யத்தைக் கருதி பாமரர்களின் புத்தி திடப்படுவதற்காக அமிருத தடாக மென்றார். அமிருதத்தைச் சிறிது தொட்டாலும் பருகினாலுமே எல்லா தாபமும் இராதென்றால் அமிருதத்தில் முழுகினால் கேட்க வேண்டாம். **நிமஜ்ய** - என்பதால் இது விளங்குகிறது. **நிஜானமானந்த3ம் ப்3ரஹ்மா** - என்பதாதி சுருதிகள் ஆனந்தரூபன் பரமேச்வரன் என்பதற்குப் பிரமாணங்கள்.

**त्वमर्कस्त्वं सोमस्त्वमसि पवनस्त्वं हुतवहः**
**त्वमापस्त्वं व्योम त्वमु धरणिरात्मा त्वमिति च ।**
**परिच्छिन्नामेवं त्वयि परिणता बिभ्रति गिरं**
**न विद्मस्तत्तत्त्वं वयमिह तु यत् त्वं न भवसि ॥ २६॥**

**த்வமர்க்கஸ்த்வம் ஸோமஸ்த்வமஸி பவனஸ்த்வம் ஹுதவஹ:**
**த்வமாபஸ்த்வம் வ்யோம த்வமு த4ரணிராத்மா த்வமிதி ச ।**
**பரிச்சி2ன்னாமேவம் த்வயி பரிணதா பி3ப்4ரதி கி3ரம்**
**ந வித்3மஸ்தத்தத்த்வம் வயமிஹ து யத் தவம் ந ப4வஸி ॥ (26) ॥**

**அவதாரிகை:** - இதுவரை பரமேச்வரன் அத்விதீய நிரதிசயாநந்த ஸ்வரூபன் என்பதற்கு ஞானிகளின் அனுபவரூபமான பிரத்தியக்ஷப் பிரமாணம் கூறப்பட்டது. இப்போது அவர் அத்வைதர் என்பதை தர்க்கத்தாலும் ஸ்தாபிக்கிறார்.

**பதவுரை:** - **வரத** = வரம் தருபவனே?; **அர்க:** = ஸூரியன்; **த்வம்** = நீரே; **ஸோமஸ்** = சந்திரன்; **த்வம்** = நீரே; **அஸி** = இருக்கிறீர்; **பவன:** = வாயு; **த்வம்** = நீரே; **ஹுதவஹ:** = அக்நி; **த்வம்** = நீரே; **ஆப:** = ஜலமும்; **த்வம்** = நீரே; **வ்யோம** = ஆகாயம்; **த்வம்** = நீரே; **த4ரணி** = பூமி; **த்வம்** = நீரே; **ஆத்மா** = யஜமானஜீவனும்; **த்வம்** - நீரே, **இதி ச** - இந்தப் பிரகாரமாக, **பரிச்சின்னாமேவம்** - அளவுபடுத்திய, **கிரம்** = வாக்கியத்தை; **த்வயி** = உம் விஷயத்தில்; **பரிணதா:** = பக்குவமுள்ளவர்கள்; **பி3ப்4ரதி** = தரிக்கட்டும் (சொல்லட்டும்); **வய் து** = நாங்களோவெனில்; **இஹ** = இவ்வுலகலில்; **த்வம்** = நீர்; **யது** = எந்த வஸ்துவாக; **ந ப4வஸி** = இருக்கவில்லையோ; **தது** = அந்த; **தத்த்வம்** = வஸ்துவை; **ந வித்3ம:** = அறிகிலோம்.

**கருத்துரை:** - ஓ பரமேச்வரனே! நீர் பிருதிவி, ஜலம், அக்கி, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், யஜமானன் என்ற எட்டு வஸ்து வடிவமாயிருக்கிறீர் என்று பக்குவ புத்திகள் கூறுகின்றனர். எனது (ஆசிரியருடைய) அபிப்பிராயமோ நீர் ஸர்வ வஸ்து ஸ்வரூபி என்பது. எனவே ஸர்வாத்மகனான உம்மைப் பிருதிவி முதலிய எட்டு வஸ்து வடிவமாக மட்டும் அவர்கள் கூறுவது யுக்தமில்லை. இங்கு பரிணதா: என்பதால் பக்குவ புத்தியில்லாதவர்களைப் பக்குவ புத்திகளென்று பரிஹாஸம் செய்யப்படுகிறது. இவ்வித கருத்து பிப்ரது என்ற க்ரியாபத பிரயோக ஸ்வாரஸ்யத்தால் புலனாகிறது. எட்டு வஸ்து வடிவமாக மட்டும் பரமேச்வரனைச்

சொல்லக்கூடாதுதான். சொன்னாலும் சொல்லட்டுமென்று அதன் தாத்பர்யமாகும். எனவே ஸர்வ ஸ்வரூபியான பரமேச்வரனை ஸூர்யாதி ஸ்வரூபமாக மட்டும் கூறுவது நிஷ்பிரயோஜனமே யாகும். சுருதிகளில் பரமேச்வரனைக் காட்டிலும் அன்யமாய் ஒரு வஸ்துவுமில்லையென்று கூறியிருப்பதால் பரமேச்வரன் அத்வி தீயன் என்பது ஸித்தமாயிற்று. பரமேச்வரன் ஸத் ரூபம். உலகில் ஒன்றும் ஸத்திற்குப் பின்னமாய் அறியப்படவில்லை. தர்க்கத்தாலும் அத்வைதமே வாஸ்தவம் என்று ஸித்திக்கிறது.

எல்லாம் பரமேச்வர ஸ்வரூபமானால் குடம் முதலிய வஸ்து ஞானமும் பரமேச்வர ஞானரூபமாவதால் குடம் முதலிய ஞானத்தாலும் மோக்ஷம் ஏற்படலாமென்ற சங்கை சரியன்று. கடாதி ஞானத்தில் அஞ்ஞான காரியமாகிய குடம் விஷயமாயிருப்பதால் அந்த ஞானம் மோக்ஷகாரணமாகாது. அஞ்ஞானகாரிய ஸம்பந்தமில்லாத சுத்த ஞானந்தான் மோக்ஷ காரணமாகும். குடம் முதலிய வஸ்து ஞானம் கண்ணுக்கு விஷயமாயிருந்தாலும் அன்ய வஸ்து ஸம்பந்தமில்லாத ஞானம் கண்களுக்கு விஷயமாகாது. வேதாந்தத்திற்கு மட்டும் தான் விஷயமாகும். அஞ்ஞான காரிய ஸம்பந்தமில்லாத ஞானமே பரமேச்வர ஞானமாகும். அதுவே மோக்ஷ காரணம். குட ஞானமில்லை. எனவே குடஞானத்தால் மோக்ஷ மேற்படாது.

**சங்கை:** - பரமேச்வரன் ஸத்ரூபன் என்றும், எல்லா வஸ்துவும் ஸத்ரூபியான பரமேச்வரனென்றும் சொல்லப்பட்டது. இதனால் அத்வைதம் எங்ஙனம் ஸித்திக்கலாம்? குடம் இருக்கிறது, ரூபம் இருக்கிறது என்ற அனுபவத்தால் ஒவ்வொரு வஸ்துவிலும் ஸத்தையின் ஸம்பந்தம் தெரிகிறது. குடம் முதலிய வஸ்துக்களும், ஸத்தையும் வெவ்வேறு. ரூபாதிகளும் ஸத்தையும் வெவ்வேறு. எல்லாவற்றிலும் ஒரே ஸத்தை இருப்பதாகக் கூற முடியாது. அங்ஙனம் கூறினால் குடத்திற்கும், ரூபம் கிரியை முதலியவற்றிற்கும் பேதமில்லாமல் போகும். எனவே ஒவ்வொரு வஸ்துக்களிலும் தனித்த ஸத்தையை ஏற்க வேண்டும். ஆகையால் எல்லாவற்றிலும் வெவ்வேறு ஸத்தை இருப்பதால், எல்லாம் ஒரே ஸத்ரூபம் என்று வர்ணித்து அத்வைதம் கூறுவது யுக்தமன்று.

**உத்தரம்:** - திரவ்யம், குணம், கிரியை முதலியவற்றில் ஸத்தை ஒரே விதமாய்த் தோன்றுவதால் ஸத்தை வெவ்வேறல்ல. திரவ்யம் முதலியவற்றின் தர்மமுமல்ல. எல்லா வஸ்துவும் ஒரு ஸத்தையால் வியாபிக்கப்பட்டுள்ளது, அனேக ஸத்தைகளையும் அதன் ஆச்ரயங்களையும் ஒப்புக் கொள்வதைக் காட்டிலும் ஸர்வமும் ஒரு ஸத்தாரூபமென்று ஒப்புக் கொள்வதுதான் சுருதி யுக்திக்கு சம்மதமாகும். ஆனால் ஒரு ஸத்தையால் திரவ்ய குணாதி பேதம் ஸித்திக்காமல் போகுமே என்றால், வாஸ்தவமாக அந்தப் பேதம் ஸித்திக்காதுதான். மாயிகமாக ஸர்வபேத வியவஹாரமும் ஸித்திக்கலாம். இரண்டு சந்திரர்கள் என்ற பேதவியவஹாரம் எங்ஙனம் பிராந்தி ஸித்தமோ, அதுபோல் ஸத்தைக் காட்டிலும் அன்யமான வஸ்துக்களின் பேத வியவஹாரமும் பிராந்தி ஸித்தமேயாகும். உண்மையில் ஸத்து ஒன்று தான் உண்டு. அன்யமெல்லாம் அதில் கல்பிதமே. அந்த ஸத்ரூபியோ ஈச்வரன். ஆதலால் அத்வைதம்தான் வாஸ்தவம். எனவே

பரமேச்வரனுக்கு அன்யமாக, சேதனமோ, அசேதனமோ ஒன்றுமில்லை. இதனால் "**மேத3வ்யவஹார: - ஏகஸத்3வஸ்துமாதாலம்ப3ன: - மேத3வ்யவஹாரத்வாத் - த்3விசரந்த்ரு மேத3வ்யவஹாரத்வத்** - என்ற யுக்தி காட்டப்பட்டது. சுருதியும் இதற்குப் பிரமாணமா யிருக்கிறது. பரமேச்வரனுக்கு அன்யமாய் ஜீவனில்லை என்பது 'அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிச்ய' என்பதாதி சுருதிகளாலும் பரமேச்வரனுக்கு வேறாய் ஜடப்பிரபஞ்சமில்லை என்பது '**இதம் ஸர்வம் ய தயமாத்மா**' என்பதாதி சுருதிகளாலும் தெரிகிறது. ஆகையால் பரமேச்வரன் அத்விதீயன் என்பதைப் பிரத்தியக்ஷானுமான சுருதிகளால் இங்கே காட்டியிருக்கிறது. இதைத்தான் '**வித்மஸ் தத்தவம்**' என்று இந் நூலாசிரியரும் கூறியிருக்கிறார்.

**त्रयीं तिस्रो वृत्तीस्त्रिभुवनमथो त्रीनपि सुरा**
**नकाराद्यैर्वर्णस्त्रिभिरभिदधत्तीर्णविकृति ।**
**तुरीयं ते धाम ध्वनिभिरवसन्धानमणुभिः**
**समस्त व्यस्त त्वां शरणद गृणात्योमिति पदम् ॥ २७ ॥**

**த்ரயீம் திஸ்ரோ வ்ருத்தீஸ்த்ரிபு4வனமதோ2 த்ரீனபி ஸுரான்**
**அகாராத்3யைர் வர்ணைஸ்த்ரிபி4ரபி4த3த4த் தீர்ணவிக்ருதி ।**
**துரீயம் தே தா4மத்4வனிபி4ரவருந்தா4னமணுபி4:**
**ஸமஸ்தம் வ்யஸ்தம் த்வாம் ஶரணத3 க்3ருணாத்யோமிதி பத3ம்**
**||27||**

**அவதாரிகை:** - இதில் அத்விதீயன் ஈச்வரன் என்பதை சுருதிப் பிரமாணத்தாலும் கூறுகிறார். அல்லது முன்பு இரு சுலோகங்களில் தத்தவம் பதார்த்தங்களைச் சோதித்துவிட்டு இதில் அகண்ட வாக்கியார்த்தங்களைக் கூறுகின்றார்.

**பதவுரை: - ஶரணத3** = அபயமளிப்பவனே!; **வ்யஸ்தம்** = வெவ்வேறாக அவயவ சக்தியுள்ள; **ஓமிதி பத3ம்** = ஓங்கார பதம்; **அகாராத்** = அகாரம் முதலிய; **த்ரிபி4** = மூன்று; **வர்ணை:** = வர்ணங்களால்; **த்ரயீம்** = மூன்று வேதத்தையும்; **திஸ்** = மூன்று; **வ்ருத்தீ:** = அவஸ்தைகளையும்; **த்ரிபுவனம்** = மூவுலகத்தையும்; **த்ரீ** = மூன்று; **ஸுரனபி** = மூர்த்திகளையும்; **பிரபி4த3த4த்** = போதிப்பதாய்க் கொண்டு; **வ்யஸ்தம்** = பின்னனான; **த்வாம்** = உம்மை; **க்3ருணாத்** = பிரதிபாதிக்கிறது; **ஸமஸ்தம்** = ஸமுதாய சக்தியுள்ள; **ஓமிதி பதம்** = ஓங்காரபதம்; **தீர்ண விக்ருதி** = விகாராதீதமாயும்; **துரீயம்** = துரீயமும் ஆன; **தே** = உமது; **தா4ம** = ஸ்வப்ரகாச ஸ்வரூபத்தை; **அணுபி4:** = பரம ஸூக்ஷ்மங்களான; **த்4வனிபி4:** = அர்த்த மாத்திரைகளால்; **அவருந்தா4னம்** = போதிப்பதாய்க் கொண்டு; **ஸமஸ்தம்** = ஸர்வாத்மகனான; **த்வாம்** = உம்மை; **க்3ருணாத்** = பிரதிபாதிக்கின்றது.

**கருத்துரை:** - ஓ அபயமளிப்பவனே! ஸமஸ்தமாயும் வியஸ்தமாயுமுள்ள ஓங்காரமென்னும் பதமானது அத்விதீயமாயும், ஸர்வாத்மகமாயும் உள்ள உமது நிர்குண ஸ்வரூபத்தையும் ஆத்யாத்மிக ஆதிதைவிக பேதமுள்ள உமது ஸகுண ஸ்வரூபத்தையும் கூறுகிறது. எல்லா வேதங்களுக்கும் ஆதியாயுள்ள ஓங்காரமும் உமது ஸகுண நிர்குண ஸ்வரூபத்தைக் கூறுவதால் உமது மஹிமை வாக்குக்கும் மனசுக்கும் விஷயமாகாது.

**அதாவது:** - ஓங்காரம் ஸமஸ்தம் வியஸ்தம் என்று இருவிதம். அகார உகார மகாரமென்னும் மூன்று பதத்திற்கு கர்மதாரயாஸமாஸம் செய்த ஓங்காரம் ஸமஸ்தபதம் எனப்படும். அகார உகார மகாரமென்னும் மூன்று பதங்களுக்கு ஸமாஸம் செய்யாத ஓங்காரபதம் வியஸ்த மெனப்படும். வியஸ்தங்களான அகாராதி மூன்று பதங்களால் வியஸ்தனான பரமேச்வரனை ஓங்காரபதம் தெரிவிக்கிறது. ஸமஸ்தமான ஓங்காரபதம் ஸமஸ்தனான பரமேச்வரனைத் தெரிவிக்கிறது. அகாராதி மூன்று வியஸ்தபதங்கள் மூன்று வேதங்களையும், மூன்று அவஸ்தைகளையும் அதன் அபிமானிகளான விச்வ தைஜஸ பிராஞ்ஞர்களையும், மூன்று உலகங்களையும், அதன் அபிமானிகளான விராட், ஹிரண்ய கர்ப்ப, அவ்யாகிருதர்களையும், பிரஹ்ம விஷ்ணு மஹேச்வரர்களையும் தெரிவிக்கிறது.

**அதாவது:** - அகாரத்தால் ருக்வேதம், ஜாக்கிருதாவஸ்தை, பூலோகம், பிரஹ்மா என்ற நான்கும், உகாரத்தால் யஜுர்வேதம், ஸ்வப்நாவஸ்தை, புவர்லோகம், விஷ்ணு என்ற நான்கும், மகாரத்தால் ஸாமவேதம், ஸுஷுப்தியவஸ்தை, ஸ்வர்க்கலோகம் மஹேச்வரன் என்ற நான்கும் தெரிவிக்கப்படுகின்றன. எனவே ஸர்வபிரபஞ்ச வடிவனான உம்மை வியஸ்தமான ஓங்காரபதம் அகாராதிவர்ணங்களால் கூறித் துதிக்கின்றது. இவ்விதமே ஸமஸ்தமான ஓங்கார பதம் அர்த்தமாத்திரையால் விகாராதீதமாயும் துரீயமாயும், அவஸ்தாத்ரயாபிமான சூன்யமாயும், அகண்டசைதன்ய ஸ்வரூபமாயுமுள்ள உமது நிர்குண ஸ்வரூபத்தைக் கூறுகிறது. இதனால் அகண்ட வாக்யார்த்தமும் ஸித்தித்தது. எப்படி யெனின்? ஸ்தூலப்பிரபஞ்சோபஹித சைதன்யமே அகாரவாச்யார்த்தம். ஸ்தூலப் பிரபஞ்சாம்சத்தை விட்ட சைதன்யம் அகாரலக்ஷ்யார்த்தம். ஸூக்ஷ்மப் பிரபஞ்சோபஹித சைதன்யம் உகாரவாச் யார்த்தம்.. ஸூக்ஷ்மப் பிரபஞ்சாம்சத்தை விட்ட சைதன்யம் உகாரலக்ஷ்யார்த்தம். காரண பிரபஞ்சோ (மாயோ) பஹித சைதன்யம் மகாரவாச்யார்த்தம் காரணப் பிரபஞ்சா (மாயா)ம் சத்தை விட்ட சைதன்யம் மகாரலக்ஷ்யார்த்தம். துரீயத்வ, ஸர்வானு கதமாயிருக்கும் தன்மை இவைகளால் உபஹிதமாயுள்ள சைதன்யம் அர்த்த மாத்திரையின் வாச்யார்த்தம். அவ்வுபாதியை விட்ட சுத்த சைதன்யமாத்திரம் அர்த்தமாத்திரையின் லக்ஷ்யார்த்தமாகும். அகார உகார மகார அர்த்த மாத்திரையாகிய இந்த நான்கின் ஸாமானாதி கரண்யத்தால் அபேதம் அறிவிக்கப்படுவதால் பரிபூர்ண அத்விதீய சைதன்யஸ்வரூபமான பரமேச்வர ஸ்வரூபம் ஸித்திக்கிறது. லக்ஷணையால் தியாகம் செய்யப்பட்ட த்வைத வடிவ உபாதியெல்லாம் மாயா கல்பிதமானதால் பொய்யானதால், மேற்கூறிய அகண்ட ஞானத்தால் அது நிவிருத்தித்து விடுகிறது. அதிஷ்டான ஞானம் ஏற்பட்ட பிறகு

அத்யஸ்த (கல்பித) வஸ்து ஞானமிருப்பதில்லை என்பது ரஜ்ஜு ஸர்ப்பப் பிராந்தியில் காணப்பட்டிருக்கிறது. இந்தச் சுலோகத்தில் கூறியுள்ள வேதம் முதலிய த்வைதோபாதிகளுக்கு அகண்டலக்ஷ்ய வாக்கியார்த்தத்தில் உபயோகமில்லாமற் போனாலும், அவை ஸகுணோபாஸனையில் உபயோகப்படுகின்றதால் வீணன்று. எனவே ஓங்காரத்திற்கு அத்விதீயமாய், ஜீவாபின்னமாயுள்ள பரமேச்வர ஸ்வரூபமே முக்கியார்த்தம் எனக் கொள்ள வேண்டும். இங்கு ஓங்காரத்திற்கு அகண்டவாக்யார்த்தம் கூறியிருப்பது தத் - த்வமஸி முதலிய மஹாவாக்யங்களை உபலக்ஷணமாக வாங்கிக் கொள்வதற்காக என்று காண்க.

**भवः शर्वो रुद्रः पशुपतिरथोग्रः सहमहां**
**स्तथा भीमेशानाविति यदभिधानाष्टकमिदम् ।**
**अमुष्मिन्प्रत्येकं प्रविचरति देव श्रुतिरपि**
**प्रियायास्म धाम्ने प्रविहितनमस्योऽस्मि भवते ॥२८ ॥**

**ப$^{4}$வ: ஶர்வோ ருத்$^{3}$ர: பஶுபதிரதோ$^{2}$க்$^{3}$ர: ஸஹமஹான்**
**ததா$^{2}$ பீ$^{4}$மேஶானாவிதி யத$^{3}$பி$^{4}$தா$^{4}$னாஷ்டகமித$^{3}$ம் ।**
**அமுஷ்மின் ப்ரத்யேகம் ப்ரவிசரதி தே$^{3}$வ ஶ்ருதிரபி**
**ப்ரியாயாஸ்மைதா$^{4}$ம்னே ப்ரவிஹித நமஸ்யோ(அ)ஸ்மி ப$^{4}$வதே ||28||**

**அவதாரிகை:** - அத்விதீய பரமேச்வரன் பிரணவார்த்தமென வர்ணிக்கப் பட்டது. பிரணவார்த்த சிந்தனமும் ஜபமும் ஸமாதி நிலைக்கு ஸாதன மென்பதாக **"ஸமாதிஸ்தி$^{4}$தி$^{3}$ரீஷரப்ரணிதா$^{4}$னாத்"** **"ஈக்ஷரபணிகா$^{4}$னாத்$^{3}$வா"** **"தஸ்யவாசக: ப்ரணவ:"** **"தஜ்ஜபஸ்த$^{3}$ர்த$^{2}$பா$^{4}$வனம்"** என்ற சூத்ரங்களால் பதஞ்சலி பகவான் கூறியிருக்கிறார். **ராதத$^{3}$லம்ப$^{3}$ணம் ஸ்ரேஷ்டம்** என்பாதாதி சுருதிகளிலும் ஸர்வ புருஷார்த்த ஸாதனமாகப் பிரணவார்த்த சிந்தனம் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் இது சிலருக்கே முடியும். எல்லா அதிகாரிகளுக்கும் பொதுவாகப் பரமேச்வர நாமங்களை ஜபத்தின் பொருட்டுக் கூறுபவராய் இப்போது துதிக்கின்றார்.

**பதவுரை:** - **தே$^{3}$வ** = பரமேச்வரனே; **ப$^{4}$வ:** = பவன்; **ஶர்வ:** = சர்வன்; **ருத்$^{3}$ர:** = ருத்திரன்; **பஶுபதி:** = பசுபதி; **அத** = பிறகு; **உக்$^{3}$ர:** = உக்ரன், **ஸஹமஹான்** = மஹாதேவன்; **ததா$^{2}$** = அவ்விதமே; **பீ$^{4}$ம: ஈஶான:** = பீமன் ஈசானன்; **இதி** = என்ற; **யதபிதானாஷ்டகமிதம்** = யாதொரு நாமங்கள் எட்டு உண்டோ?; **அமுஷ்மின்** = அவற்றில்; **ப்ரத்யேகம்** = ஒவ்வொரு நாமத்தையும்; **ஶ்ருதிரபி** = வேதமும்; **ப்ரவிசரதி** = தெரிவிக்கிறது; **ப்ரியாய** = பரமப்பிரியராயும்; **தாம்னே** = ஜ்யோதிஸ்வரூபராயுமுள்ள; **அஸ்மை** = அத்தகைய; **ப$^{4}$வதே** = உமக்கு; **ப்ரவிஹித நமஸ்யோ** = நமஸ்காரம் செய்கிறவனாக; **அஸ்மி** = இருக்கிறேன். (நமஸ்கரிக்கின்றேன்).

**கருத்துரை: -** ஓ பரமேக்வரனே! புராண ஆகமாதிகளில் பவன் முதலிய எட்டு நாமங்கள் உமக்கு மிக முக்கியம், எனக் கூறியிருக்கின்றன. இவையே மஹாமந்திரங்களும் ஆகும். உம்முடைய நாமங்களே எல்லா புருஷார்த் தங்களையும் கொடுக்குமானால் உமது மகிமையை அறிய யாரால் முடியும்? எனவே உமக்கு உசிதமான உபசாரம் எதையும் செய்ய எனக்குச் சக்தியில்லாததால் மனஸ் வாக்கு காயங்களால் நமஸ்காரம் மட்டும் நான் செய்கிறேன்.

எட்டாகக் கூறிய இந்நாமா ஒவ்வொன்றிலும் தேவ பதத்தைத் சேர்த்து **பவாய தேவாய நம:** என்பது ரஹஸ்யமந்திரம். இவ்வெட்டு நாமங்களும் எட்டு மூர்த்திகள், ஜலமூர்த்தி பவன், பிருதிவீமூர்த்தி சர்வன், அக்னி மூர்த்தி ருத்திரன், வாயு மூர்த்தி உக்ரன், ஆகாச மூர்த்தி பீமன், யஜமான மூர்த்தி பசுபதி, சந்திர மூர்த்தி மஹாதேவன், சூரியமூர்த்தி ஈசானன். இவ்வெட்டிலும் முதலில் பிரணவத்தையும் முடிவில் நம: சப்தத்தையும் சேர்த்து அஷ்ட மூர்த்திகளை உபாஸிக்க வேண்டியது ரஹஸ்யார்த்தம்.

**नमो नेदिष्ठाय प्रियदव दविष्ठाय च नमः**
**नमः क्षोदिष्ठाय स्मरहर महिष्ठाय च नमः ।**
**नमो वर्षिष्ठाय त्रिनयन यविष्ठाय च नमः**
**नमः सर्वस्मै ते तदिदमतिसर्वाय च नमः ॥ २९॥**

**நமோ நேதி³ஷ்டா²ய ப்ரியத³வ த³விஷ்டா²ய ச நம:**
**நம: க்ஷோதி³ஷ்டா²ய ஸ்மரஹர மஹிஷ்டா²ய ச நம: |**
**நமோ வர்ஷிஷ்டா²ய த்ரிநயன யவிஷ்டா²ய ச நம:**
**நம: ஸர்வஸ்மை தே ததி³த³மிதி ஸர்வாய ச நம: || 29 ||**

**அவதாரிகை: -** இந்தச் சுலோகத்தில் பரமேச்வரனிடம் அதிக பக்தியால் அனேக நமஸ்காரங்களைச் செய்து கொண்டு அவரது ஊகிக்கமுடியாத மஹிமையை வர்ணிக்கிறார்.

**பதவுரை: - ப்ரியத³வ** = ஜனங்களின் வனத்தில் ஸஞ்சரிப்பவனே!; **நேதி³ஷ்டா²ய** = மிகச் சமீபத்திலிருப்பவரான; **தே** = உமக்கு; **நம:** = நமஸ்காரம்; **த³விஷ்டா²ய ச** = அதிக தூரத்திலுமிருப்பவரான; **தே** = உமக்கு; **நம:** = நமஸ்காரம்; **க்ஷோதி³ஷ்டாய** =- மிகச் சிறியவரான; **தே** = உமக்கு; **நம:** = நமஸ்காரம்; **ஸ்மரஹர!** = மன்மதனை எரித்தவனே!; **மஹிஷ்டா²ய ச** = மிகப்பெரியவராகிய; **தே** = உமக்கு; **நம:** = நமஸ்காரம்; **த்ரிநயன!** = முக்கண்ணனே;, **வர்ஷிஷ்டா²ய** = மிகக் கிழவராகிய; **தே** = உமக்கு; **நம:** = நமஸ்காரம்; **யவிஷ்டா²ய** = யௌவனராகிய; **தே** = உமக்கு; **நம:** = நமஸ்காரம்; **ஸர்வஸ்மை** = ஸர்வரூபியாகிய; **தே** = உமக்கு; **நம:** = நமஸ்காரம்; **ததி³தி** = பரோக்ஷமாயும்; **இத³மிதி** = அபரோக்ஷமாயுமுள்ள; **ஸர்வாய ச** = ஸர்வத்திற்கும் அதிஷ்டானமாகிய; **தே** = உமக்கு; **நம:** = நமஸ்காரம்.

**கருத்துரை:** - பரமேச்வரரூபம் இன்ன விதமென்று தீர்மானிக்க முடியாமல் இருப்பதால் நமஸ்காரத்தைத் தவிர வேறொன்றும் செய்வதற்கில்லை. இங்கு கூறிய விருத்த ஸ்வபாவங்கள் அனைத்தும் சுருதிகளில் பரமேச்வரனிடம் சொல்லப் பட்டுள்ளன **"தத்$^{3}$வதூ$^{3}$ரே தத்$^{3}$வந்திகே" "தூ$^{3}$ராத்ஸுதூ$^{3}$ரே ததி$^{3}$ஹாந்திகேச" "அணோரணியான் மஹதோமஹீயான்" "த்வஸ்தி த்வம் பூமானஸி த்வம்குமார உதவா குமாரி" "த்வம் ஜீர்ணாம் த$^{3}$ண்டே$^{4}$ன வஹஸி த்வம் ஜாதோ ப$^{4}$வஸி விக்ஷதோமுக: ॥ இதம் ஸர்வ யத$^{3}$யமாத்மா"** என்று இதனால் பரமேச்வரன் ஸர்வாத்மகனென்றும், ஸர்வாதிஷ்டானமானவனென்றும் கூறி நாநாவித மஹிமை வாய்ந்த அஷ்ட மூர்த்தியான அவருக்கு எட்டு நமஸ்காரங்கள் நூலாசிரியரால் செய்யப்பட்டுள்ளன. இதன் மூலம் பரமேச்வரனிடம் பேரன்பு கவிக்குப் புலனாகிறது.

**बहुलेरजसे विश्वोत्पत्तौ भवाय नमोनमः**
**प्रबलतमसे तत्संहारे हराय नमोनमः ।**
**जनसुखकृते सत्वोद्रिक्तौ मृडाय नमोनमः**
**प्रमहसिपदे निस्त्रैगुण्ये शिवाय नमोनमः ॥ ३० ॥**

**ப$^{3}$ஹுள-ரஜஸே விஶ்வோத்பத்தௌ ப$^{4}$வாய நமோ நம:**
**ப்ரப$^{3}$ல-தமஸே தத் ஸம்ஹாரே ஹராய நமோ நம: ।**
**ஜன-ஸுக$^{2}$க்ருதே ஸத்வோத்$^{3}$ரிக்தௌ ம்ருடா$^{3}$ய நமோ நம:**
**ப்ரமஹஸி பதே$^{3}$ நிஸ்த்ரைகு$^{3}$ண்யே ஶிவாய நமோ நம: ॥ 30 ॥**

**அவதாரிகை:** - இப்போது முன்கூறிய விஷயங்கள் யாவையும் சுருக்கிக் கூறி முசிக்கின்றார்.

**பதவுரை:** - **விஶ்வோத்பத்தௌ** = பிரபஞ்சம் உத்பத்தியடைவதற்காக; **ப$^{3}$ஹுள-ரஜஸே** = (ஸத்வதமோகுணங்களைக் காட்டிலும்) அதிக ரஜோ குணமுள்ள; **ப$^{4}$வாய** = பிரஹ்ம மூர்த்தியாயிருப்பவருக்கு; **நமோ நம:** = நமஸ்காரம் நமஸ்காரம்; **தத்ஸம்ஹாரே** = உலகப் பிரளயத்துக்காக; **ப்ரப$^{3}$லதமஸே** = அதிக தமோ குணம் பொருந்திய; **ஹராய** = ருத்திரமூர்த்தியாயிருப்பவருக்கு; **நமோ நம:** = நமஸ்காரம் நமஸ்காரம்; **ஜன-ஸுக$^{2}$க்ருதே** = ஜனங்களுக்கு ஆனந்தமளிப்பதற்காக; **ஸத்வோத்$^{3}$ரிக்தௌ** = அதிக ஸத்வ குணமுள்ளவராகிய; **ம்ருடா$^{3}$ய** = விஷ்ணு மூர்த்தியாயிருப்பவருக்கு; **நமோ நம:** = நமஸ்காரம் நமஸ்காரம்; **நிஸ்த்ரைகு$^{3}$ண்யே** = முக்குணங்கடந்ததும்; **ப்ரமஹஸிபதே** = ஜ்யோதிர்மயமானதுமான; **பதே$^{3}$** = மோக்ஷபதத்திற்காக; **ஶிவாய** = சிவ ஸ்வரூபராயுள்ளவருக்கு; **நமோ நம:** = நமஸ்காரம் நமஸ்காரம்.

**கருத்துரை:** - பரமேச்வன் ஒருவனே தன்னிடமுள்ள மாயாசக்தியின் முக் குணங்களால் இவ்வுலகக்திற்கு உத்பத்தி-ஸ்திதி-லயங்களைச் செய்கின்றார். ஸத்வ தமோகுணங்கள் குறைந்து ரஜோ குணம் அதிகமாயிருக்கும் போது பிரஹ்மாவாயும், தமோ குணம் மேலாகவிருக்கும் போது ருத்திரனாயும் ஸத்வகுணம் மற்ற

இருகுணங்களைக் காட்டிலும் மேலாயிருக்கும்போது விஷ்ணுவாயும் ஒரே பரமேச்வரன் இருந்து கொண்டு முத்தொழிலையும் செய்கிறான். மாயையின் முக்குண ஸம்பந்தம் சிறிதுமில்லாமலிருக்கும்போது நிர்க்குண ஸ்வப்பிரகாச சைதன்ய மூர்த்தியாக அவரே இருக்கிறார். இதனால் ஏகேச்வரவாதம் சொல்லப் பட்டதாகிறது. “**ஏகம் ஸத்$^3$விப்ரா ப$^3$ஹுதா$^4$ வத$^3$ந்தி**” என்பதாதி சுருதிகள் அனேகேச்வர வாதத்தை நிராகரிக்கின்றன. இதிலும் அஷ்டமூர்த்தியான பரமேச்வரனுக்கு எட்டு நமஸ்காரங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

சிலர் மூன்றாம் பாதத்தை இரண்டாவதாகப் படிக்கிறார்கள். இது சரியில்லை; உத்பத்தி நாச காலம் வெகு அற்பமாயிருக்கிறது. ஸ்திதி காலந்தான் அவ்விரண்டைக் காட்டிலும் அதிகமானதாலும், பரிபாலனத்தில் ஸ்துதியை முடிப்பதுதான் உசிதமானதாலும், இருக்கிறபடி வாசிப்பதே நல்லது. இவ்விதமே பட்டபாணனும் வர்ணிக்கிறான்.

**रजोजुषे जन्मनि सववृत्तये स्थितौ प्रजानां प्रलये तमस्पृशे ।**
**अजाय सर्गस्थितिनाशहेतवे त्रयीमयाय त्रिगुणात्मने नमः ॥**

**ரஜோ ஜுஷே ஜன்மனி ஸத்த்வ விருத்தயே**
**ஸ்திதௌ ப்ரஜானாம் ப்ரளயே தமஸ்ப்ருசே ।**
**அஜாய ஸர்க ஸ்திதி நாச ஹேதவே**
**த்ரயீமயாய த்ரிகுணாத்மநே நம: ॥**

**कुशपरिणति चेतः क्लेशवश्यं क्व चेदं**
**क्व च तव गुणसीमोल्लचिनी शश्वदृद्धिः ।**
**इति चकितममन्दीकृत्य मां भक्तिराधा**
**द्वरद शरणयोस्ते वाक्यपुष्पोपहारम् ॥ ३१ ॥**

**க்ருஶ-பரிணதி-சேத: க்லேஶவஶ்யம் க்வ சேத$^3$ம்**
**க்வ ச தவ கு$^3$ண-ஸீமோல்லங்கி$^4$னீ ஶஶ்வத்$^3$ருத்$^3$தி$^4$: ।**
**இதி சகிதமமந்தீ$^3$க்ருத்ய மாம் ப$^4$க்திராதா$^4$த்$^3$**
**வரத$^3$ சரணயோஸ்தே வாக்ய-புஷ்போபஹாரம்** ॥ 31 ॥

**அவதாரிகை:** - இதுவரை பரமேச்வரனைத் துதித்துவிட்டு **மமத்வேதாம் வாணீம்** என்று மூன்றாம் சுலோகத்தில் கூறிய தன்னடக்கத்தை முடிவிலும் கூறுகிறார்.

**பதவுரை:** - **வரத$^3$** = இஷ்டத்தை அளிப்பவனே!; **க்ருஶபரிணதி** = கொஞ்சம் பக்குவமாயும்; **க்லேஶவஶ்யம்** = துக்கங்களுக்கு வசமாயுமுள்ள; **இந்** = இந்த; **சேத$^3$ம்** = என் மனம்; **க்வ** = எங்கே; **கு$^3$ணஸீமோல்லங்கி$^4$னீ** = குணங்களின் எல்லையைக் கடந்த; **தவ** = உனது; **ஶஶ்வத்$^3$ ருத்$^3$தி$^4$:** = நித்ய விபூதி; **க்வ ச** =

எங்கே; **இதி** = என்று; **சகிதம்** = பயந்துள்ள; **மாம்** = என்னை; **ப$^{4}$க்தி** = (உம்மிடமுள்ள என்) பக்தியானது; **அமந்தீ$^{3}$க்ருத்ய** = மந்தமில்லாமற் செய்து; **வாக்ய-புஷ்போபஹாரம்** = இத்துதியாகும் புஷ்பாஞ்ஜலியை; **தே** = உமது; **சரணயோஸ்தே** = திருவடிகளில்; **ஆதா$^{4}$த்$^{3}$** = அர்ப்பணம் செய்தது.

**கருத்துரை: -** ஓ! வரம் தரும் வள்ளலே! ராகத்வேஷாதிகளுடன் கூடினதும் பக்வமில்லாததுமான என் மனம் எங்கே? உனது அனந்த நித்ய மஹிமை எங்கே? எனவே உம்மை நான் எவ்விதம் துதிப்பேன் என்று பயத்தையடைந்த என்னை, உன்னிடம் செலுத்திய பக்தியானது பலாத்காரமாய் உம்மைத் துதிக்கும்படி தைரியத்தைக் கொடுத்துத் தூண்டிற்று. பிறர் தூண்டுதலால் பிரவிருத்தித்த என்னிடம் குற்றமிருந்தாலும் நீ பொறுத்தருளவேண்டும். இந்த மாதிரி நிச்சயமும் உமது பக்தியாலேயே எனக்கு ஏற்பட்டது. என் அபராதங்களை எல்லாம் பொறுத்து உன்மீது எனக்குப் பக்தி மேன்மேலும் விருத்தியடையுமாறு நீ கருணை புரிய வேண்டும்.

புஷ்பங்கள் வண்டுகளுக்குத் தேனையும், மற்றவர்களுக்கு வாஸனையால் ஸந்தோஷத்தையும் கொடுப்பது போல் இந்தக் தோத்திரமும் சிவ பக்தர்களுக்குப் பரமசிவனின் மஹிமை என்னும் அமிருத ரஸத்தையும், மற்றவர்களுக்குக் கேட்டவுடனேயே ஆனந்த விசேஷத்தையும் கொடுக்கிறதென்பதைத் தெரிவிக்க 'வாக்ய புஷ்போபஹாரம்' என்று கூறினார்.

**असितगिरिसमं स्यात्कजलं सिन्धुपात्रे**
**सुरतरुवरशाखा लेखनी पत्रमुर्वी ।**
**लिखति यदि गृहीत्वा शारदा सार्वकालं**
**तदति तव गुणानामीशं पारं न याति ॥ ३२ ॥**

**அஸித-கி$^{3}$ரி-ஸமம் ஸ்யாத் கஜ்ஜலம் ஸிந்து$^{4}$-பாத்ரே**
**ஸுர-தருவர-ஶாகா$^{2}$ லேக$^{2}$னி பத்ரமுர்வீ ।**
**லிக$^{2}$தி யதி$^{3}$ க்$^{3}$ருஹீத்வா ஶாரதா$^{3}$ ஸார்வகாலம்**
**தத$^{3}$பி தவ கு$^{3}$ணானாமீஶ பாரம் ந யாதி ॥ 32 ॥**

**அவதாரிகை: -** இந்த ஸ்தோத்திரத்தின் ஆரம்பத்தில் பிரஹ்மாதி தேவர்களும் பரமேச்வரனின் அனந்த மகிமையை உணர வில்லை என்று கூறியதற்குக் காரணத்தைக் காட்டி, தனக்கும் அவ்விதமே கர்வத்திற்குக் காரணமில்லை என்பதைக் கூறுபவராய் ஸ்தோத்திரத்தை முடிக்கின்றார்.

**பதவுரை: - ஈஶ** = ஈச்வர; **ஸிந்து$^{4}$-பாத்ரே** = ஸமுத்திரமாகும் மைக்கூட்டில்; **அஸித-கி$^{3}$ரி-ஸமம்** = நீலமலை போன்ற; **கஜ்ஜலம்** = மையாயும்; **ஸுர-தருவர-ஶாகா$^{2}$** = கல்ப விருக்ஷத்தின் சிறந்த கிளை; **லேக$^{2}$னீ** = எழுதுகோலாயும்; **ஊர்வீ** = பூமி; **பத்ரம்** = ஏடாயும்; **ஸ்யாத்** = இருக்குமானால்; (**ஏதத்** = இந்த ஸாதனத்தை);

**க்3ருஹீத்வா** = சேகரித்துக் கொண்டு; **ஶாரதா3** = ஸரஸ்வதிதேவி; **ஸர்வகாலம் =** தன் ஆயுள் காலமனைத்தும்; **லிக2தி யதி3 =** எழுதுவாளானால்; **ததபி =** அப்போதும்; **தவ =** உமது; **கு3ணானாம் =** குணங்களின்; **பாரம் =** எல்லையை; **ந யாதி =** அடைகிறாளில்லை.

**கருத்துரை:** - பரமேச்வரனே! ஸமுத்திரத்தை மைக்கூடாயும், நீலமலையை மையாயும், கற்பதருவின் கொம்பை எழுதுகோலாயும் பரந்த பூமியை ஏடாயும் சேகரித்துக் கொண்டு ஸர்வ சக்தியாயும் ஸர்வஞ்ஞையாயும் உள்ள ஸரஸ்வதீ ஒரு க்ஷணங்கூட ஓய்வின்றி உமது குணங்களை எழுதுவதில் முயற்சித்தாலும் உமது குணங்களனைத்தையும் எழுத முடியாதவளாகவே ஆகிறாள் என்றால் எம் போன்றவர்களைக் கேட்க வேண்டாம். இதனால் ஸரஸ்வதிக்கு ஸர்வஜ்ஞுத்வம் இல்லாமற் போகுமோவெனின், அறியக்கூடிய எல்லாவற்றையும் அறிவதே ஸர்வஜ்ஞுத்வமானதால் அளந்து அறிய முடியாத பரமேச்வரனின் அநந்தமங்கள் குணங்களை அறியாததால் ஸரஸ்வதிக்கு ஸர்வஜ்ஞுத்வ பங்கதோஷமில்லை. பரமேச்வரனின் குணங்கள் அனந்தங்கள் என்று உணர்வதே ஸர்வஜ்ஞுத்வம். பரமேச்வரனின் குணங்களை எல்லாம் அறிந்து விட்டதாக உணர்வதே பிராந்தி ஞானமாகும். இதனால் பரமேச்வரனது மஹாமஹிமை கூறப்பட்டது.

**असुरसुरमुनीन्द्रैरर्चितस्येन्दुमौले**
**ग्रंथितगुणमहिम्नो निर्गुणस्येश्वरस्य ।**
**सकलगणवरिष्ठः पुष्पदन्ताभिधानो**
**रुचिरमलघुवृत्तैः स्तोत्रमेतच्चकार ॥ ३३ ॥**

**அஸுர-ஸுர-முனீந்த்3ரைரர்ச்சிதஸ்யேந்து3-மௌலே:**
**க்3ரதி2த-கு3ணமஹிம்னோ நிர்கு3ணஸ்யேஶ்வரஸ்ய ।**
**ஸகல-க3ண-வரிஷ்ட2: புஷ்பத3ந்தாபி4தா4ன:**
**ருசிரமலகு4வ்ருத்தை: ஸ்தோத்ரமேதத்சகார** ॥ 33 ॥

**அவதாரிகை:** - இதற்கு முன்புள்ள சுலோகத்துடன் ஸ்தோத்திரம் முடிவுற்றது. இதில் இந்த ஸ்தோத்திரம் செய்தவரின் பெயரும், விஷயமும் கூறப்படுகின்றன.

**பதவுரை:** - **அஸுர-ஸுர-முனீந்த்3ரைர: =** அஸுரர் தேவர் முனிசிரேஷ்டர் இவர்களால்; **அசிதஸ்யே =** பூஜிக்கப்பட்டவரும்; **க்3ரதி2த கு3ணமஹிம்ன:** - குணமஹிமைகளுடன் கூடினவரும், **நிர்கு3ணஸ்ய** - (உண்மையில்) நிர்குணரும்; **இந்து3மௌலே:** - சந்திரசேகரருமான, **ஈஶ்வரஸ்ய** - பரமேச்வருடைய, **ஏதத்** - இந்த, **ஸ்தோத்ரம்** - ஸ்தோத்திரத்தை, **ஸகல-க3ண-வரிஷ்ட2:** - எல்லா சிவ கனங்களுக்குள் சிறந்தவரான, **புஷ்பத3ந்த அபி4தா4ன:** - புஷ்பதந்தன் என்ற பெயருள்ளவர்; **அலவ்ருத்தை:** - பெரிய விருத்தங்களால், **ருசிரம்** - ரமணீயமாக, **சகார** - செய்தார்.

**கருத்துரை:** - பரமேச்வரன் ஸகுணமாயும் நிர்குணமாயும் இருக்கிறார். இந்த ஸ்தோத்திரத்தில் ஸகுணஸ்வரூபம் நிர்குணஸ்வரூபம் இரண்டும் துதிக்கப் படுகின்றன. ஸகுணஸ்வரூபம் வியாவஹாரிகமாகும். நிர்குண ஸ்வரூபமே பாரமார்த்திகம். இந்த ஸ்தோத்திரத்தை எழுதியவர் புஷ்பதந்தர் என்ற கந்தர்வராவர். இவர் சிவ கணங்களின் தலைவராயுள்ளவர். சிலர் **ஸகலகு3ணாவரிஷ்ட:** - என்றும் **ஸகலக3ணாவரிஷ்ட:** என்ற ஸ்தானத்தில் படிக்கிறார்கள். அப்போது ஸகல நற்குணங்கள் நிறைந்த புஷ்பதந்தனென்று அர்த்தம். **ஷிரவரிணி ஹரிணி மாலினி** என்ற பெரிய விருத்தங்களில் இந்த ஸ்தோத்திரம் எழுதப்பட்டிருக்கிறது. 29 - ஆவது சுலோகம் வரை சிகரணீ விருத்தத்திலும், 30 - ஆவது சுலோகம் ஹரிணீ விருத்தத்திலும், 31 முதல் 37 - வது வரை மாலினீ விருத்தத்திலும் இருக்கிறது.

**अहरहरनवधं धूर्जटेः स्तोत्रमेत**
**त्पठति परमभक्त्या शुद्धचित्तः पुमान्यः ।**
**स भवति शिवलोके रुद्रतुल्यस्तथाऽत्र**
**प्रचुरतरधनायुःपुत्रवान्कीर्तिमांश्च ॥३४॥**

**அஹரஹரனவத்3யம் தூ4ர்ஜடே: ஸ்தோத்ரமேதத்**
**பட2தி பரமப4க்த்யா ஶுத்3த4-சித்த: புமான் ய: |**
**ஸ ப4வதி ஶிவலோகே ருத்3ரதுல்யஸ்ததா2(அ)த்ர**
**ப்ரசுரதர-த4னாயு: புத்ரவான் கீர்த்திமாம்ஶ்ச || 34 ||**

**அவதாரிகை:** - இது முதல் முடிவுரை. சிவரஹஸ்யம் என்னும் இதிஹாஸத்தில் கூறிய பிரயோஜனத்தையும் சிவஸ்துதியைப் படிக்கும் கிரமத்தை யும் தெரிவிக்கிறார்.

**பதவுரை:** - **ய:** = எந்த; **புமான்** = மனிதன்; **ஶுத்3த4-சித்த:** = களங்கமற்ற மனமுடையவனாய்; **அனவத்3யம்** = குற்றமற்ற; **ஏதத்** = இந்த; **தூ4ர்ஜடே:** = பரமசிவனுடைய; **ஸ்தோத்ரம்** = ஸ்தோத்திரத்தை; **பரமப4க்த்யா** = மிகபக்தியுடன்; **அஹரஹ:** = தினந்தோறும்; **பட2தி** = பாராயணம் பண்ணுகிறானோ; **ஸ** = அவன்; **ஶிவலோகே** = கைலாஸத்தில்; **ருத்3ரதுல்ய:** = சிவனுக்குச் சமமாக; **ப4வதி** = ஆகிறான்; **த்யா** = அப்படியே; **அத்ர** = இவ்வுலகத்திலும்; **ப்ரசுரதரத4னாயு** = மேன்மேலும் பெருகுகின்ற ஐச்வரியமும் ஆயுளும் பெற்றவனாயும்; **புத்ரவான்** = புத்திரவானாயும்; **கீர்த்திமாம்ஶ்ச** = கீர்த்தியுள்ளவனாயும்; **ப4வதி** = ஆகிறான்.

**கருத்துரை:** - எவனொருவன் ஏகாக்ரசித்தத்துடன் மிக உத்தமமான இந்த புஷ்பதந்த ஸ்தோத்திரத்தைப் பக்தி சிரத்தையுடன் தினந்தோறும் நியமமாகப் பாராயணம் பண்ணுகிறானோ, அவன் இவ்வுலகத்தில் ஐச்வரியம் ஆயுள் புத்திரன் கீர்த்தி முதலிய சுகத்தை அனுபவித்து விட்டு, கடைசியில் சிவஸாயுஜ்யத்தையும் சிவலோகத்தில் அனுபவிக்கிறான். இந்த ஸ்தோத்திரத்திற்கு ஸத்தியமான

பிரயோஜனம் இது தான். ஏகரக்ரசித்தமில்லாமலும், பக்தி சிரத்தையில்லாமலும் இதைப் பாராயணம் செய்வதால் மேற்கூறிய பிரயோஜனம் ஏற்படாதென்று கருத்து.

**महेशान्नापरो देवो महिम्नो नापरा स्तुतिः ।**
**अघोरान्नापरो मन्त्रो नास्ति तत्त्वं गुरोःपरम् ॥ ३५ ॥**

**மஹேஶாந்நாபரோ தே³வோ மஹிம்னோ நாபரா ஸ்துதி:** |
**அகோ⁴ராந்நாபரோ மந்த்ரோ நாஸ்தி தத்வம் கு³ரோ: பரம்** || 35 ||

**அவதாரிகை:** - 35, 36 இரண்டு சுலோகங்களால் சிவமஹிமையையும், இந்த ஸ்தோத்திரத்தின் பெருமையையும் கூறுகிறார்.

**பதவுரை:** - **மஹேசாத்** = பரமேச்வரனைக் காட்டிலும்; **அபர:** = வேறான; **தே³வ:** = தெய்வம்; **ந** = இல்லை; **மஹிம்னாத்** = சிவமஹிம்ந ஸ்தோத்திரத்தைக் காட்டிலும்; **அபர:** - வேறான; **ஸ்துதி:** = ஸ்தோத்திரமானது; **ந** = இல்லை; **அகோ⁴ராத்** = அகோர மந்திரத்தைக் காட்டிலும்; **அபர:** = வேறான; **மந்த்ர:** = மந்திரமானது; **ந** = இல்லை; **கு³ரோ:** = குருவைக்காட்டிலும்; **பர** = வேறான; **தத்வம்** = உண்மைவஸ்து, **நாஸ்தி** - இல்லை.

**கருத்துரை:** - பரமேச்வரனைத் தவிர வேறு தெய்வமில்லை. சிவமஹிம்ந ஸ்தோத்திரத்தைத் தவிர வேறு ஸ்தோத்திரமில்லை. அகோர மந்திரத்தைத் தவிர வேறு சிறந்த மந்திரமும் இல்லை. ஸ்ரீஸத்குருவைத்தவிர வேறு தத்துவம் உண்மையில்லை. "**அகோ⁴ரேப்⁴யோ த²கோ⁴ரேப்யோ கோ⁴ரகோ⁴ரதரேப்⁴ய:** | **ஸர்வேப்⁴யஸ் ஸர்வ ஸர்வேப்⁴யோ நமஸ்தே அஸ்து ருத்³ரரூபேப்4ய:** " என்பது அகோர மந்திரமென்றும், இம் மந்திரத்திற்கு விசேஷ மஹிமை உண்டென்றும் லிங்க புராணத்தில் விரிவாய் கூறியுள்ளது.

ஸ்ரீ குருவைக்காட்டிலும் வேறு தத்வமில்லை என்பதும்

**गुरुब्रह्म गुरुर्विष्णुः गुरुर्देवो महेश्वरः ।**
**गुरुस्साक्षात् परं ब्रह्म तस्मै श्रीगुरवे नमः ॥**

**குருர் ப்ரம்மா குருர் விஷ்ணு: குருர் தேவோ மஹேச்வர:** |
**குருஸ் ஸாக்ஷாத் பரம் ப்ரம்ம தஸ்மை ஸ்ரீ குரவே நம:** ||

என்ற பிரஸித்த சுலோகத்தினாலேயே விளங்குகிறது.

**दीक्षा दानं तपस्तीर्थं ज्ञानं यागादिकाः क्रियाः ।**
**महिम्नस्तवपाठस्य कला नार्हन्ति षोडशीम् ॥ ३६ ॥**

**தீ³க்ஷா தா³னம் தபஸ் தீர்த²ம் ஞானம் யாகா³தி³கா: க்ரியா:** |

**மஹிம்னஸ்தவ பாட$^{2}$ஸ்ய கலாம் நார்ஹந்தி ஷோட$^{3}$ஶீம்** || 36 ||

**பதவுரை: - தீ$^{3}$க்ஷா** = தீக்ஷையும்; **தா$^{3}$னம்** = கொடுத்தலும்; **தபஸ்** = சாந்திராயணாதி தபஸ்ஸும்; **தீர்த$^{2}$ம்** = க்ஷேத்திரதீர்த்தாடனமும்; **ஞானம்** = ஞானம்; **யாகா$^{3}$தி$^{3}$கா** = யஜ்ஞம் முதலிய; **க்ரியா:** = கர்மாக்களும்; **மஹிம்னஸ்தவ பாட$^{2}$ஸ்ய** = சிவமஹிம்ந ஸ்தோத்திர பாராயணத்துக்கு; **ஷோட$^{3}$ஶீம்** = பதினாறிலொரு; **கலாம்** = அம்சத்தையும் (அடைய); **நார்ஹந்தி** = தகுதியுள்ளன வன்று.

**கருத்துரை: -** சிவமஹிம்ந ஸ்தோத்திர பாராயணம் பண்ணுவதால் எந்தப் பலன் உண்டாகின்றதோ, அதில் பதினாறில் ஒரு அம்சம் கூட தீக்ஷை முதலிய வற்றால் உண்டாகாது. இந்த ஸ்தோத்திர பாராயணத்தாலே தீக்ஷை தானம் முதலியவற்றால் ஏற்படும் பயனையும் அடைந்து விடலாம் என்று தாத்பர்யம்.

**कुसुमदशन-नामा सर्व-गन्धर्व-राजः**
**शशिधरवर-मौलेर्देवदेवस्य दासः ।**
**स खलु निज-महिम्नो भ्रष्ट एवास्य रोषात्**
**स्तवनमिदमकार्षीद् दिव्य-दिव्यं महिम्नः ॥ ३७॥**

**குஸுமத$^{3}$ஶன-நாமா ஸர்வ-க$^{3}$ந்த$^{4}$ர்வ-ராஜ:**
**ஶஶித$^{4}$ரவர-மௌளேர்தே$^{4}$வதே$^{3}$வஸ்ய தா$^{3}$ஸ:** |
**ஸ க$^{2}$லு நிஜ-மஹிம்னோ ப்$^{4}$ரஷ்ட ஏவாஸ்ய ரோஷாத்**
**ஸ்தவனமித$^{3}$மகார்ஷீத்$^{3}$ தி$^{3}$வ்ய தி$^{3}$வ்யம் மஹிம்ன:** || 37 ||

**அவதாரிகை: -** சிவமஹிம்நஸ்தோத்திரம் 36 சுலோகங்கள் அடங்கியது தானென்பது. ஸ்ரீமதுஸூதனஸரஸ்வதீ ஸ்வாமிகளின் வியாக்யானத்திலிருந்து தெரிய வருகிறது. அதற்கு மேலேயுள்ள சுலோகங்களும் உலகில் ஸம்பிரதாயமாகப் படிக்கப்பட்டு வருவதால் அவற்றிற்கும் உரை எழுதுகிறோம்.

**பதவுரை: - ஶஶித$^{4}$ரவர-மௌளே:** = இளம் சந்திரகலையைப் பூண்ட; **தே$^{3}$வதே$^{3}$வஸ்ய** = பரமேச்வரனுடைய; **தா$^{3}$ஸ:** = சேவகனாயும்; **ஸர்வ$^{3}$கந்த$^{4}$ர்வராஜ:** = கந்தர்வராஜனுமான; **ஸ க$^{2}$லு** = அந்த; **குஶுமத$^{3}$ஶனநாமா** = புஷ்பதந்தன் என்பவன்; **அஸ்யைவ** = அப்பரமேச்வரனது; **ரோஷாத்** = கோபத்தால்; **நிஜமஹிம்னா:** = தன் மஹிமையிலிருந்து; **ப்$^{4}$ரஷ்ட:** = நழுவினவனாய்க் கொண்டு; **தி$^{3}$வ்ய தி$^{3}$வ்யம்** = மிக உத்தமமான; **இத$^{3}$ம்** = இந்த; **மஹிம்னஸ்தவனம்** = மஹிம்நஸ்தோத்திரத்தை; **ஆகார்ஷீத்** = செய்தான்.

**கருத்துரை: -** பரமேச்வரனின் தாஸனான புஷ்பதந்தன் என்ற கந்தர்வராஜன் பரமேச்வரனின் கோபத்தால் தன் பதவி இழந்து அப்பரமேச்வரனின் சந்தோஷத்திற்காக இந்த சிவமஹிம்ந ஸ்தோத்ரத்தைச் செய்தான்.

**सुरगुरुमभिपूज्य स्वर्ग-मोक्षैक-हेतुं**
**पठति यदि मनुष्यः प्राञ्जलिर्नान्य-चेताः ।**
**व्रजति शिव-समीपं किन्नरैः स्तूयमानः**
**स्तवनमिदममोघं पुष्पदन्तप्रणीतम् ॥ ३८॥**

**ஸுரகு$^{3}$ருமபி$^{4}$பூஜ்ய ஸ்வர்க$^{3}$-மோக்ஷைக-ஹேதும்**
**பட$^{2}$தி யதி$^{3}$ மனுஷ்ய: ப்ராஞ்ஜலிர்நான்ய-சேதா: ।**
**வ்ரஜதி ஶிவ-ஸமீபம் கின்னரை: ஸ்தூயமான:**
**ஸ்தவனமித$^{3}$மமோக$^{4}$ம் புஷ்பத$^{3}$ந்தப்ரணீதம் ॥ 38 ॥**

**பதவுரை:** - **ப்ராஞ்ஜலி:** = அஞ்ஜலி பந்தமுள்ளவனாயும்; **நான்யசேதா:** = ஏகாக்ரசித்தமுள்ளவனாயுமுள்ள; **மனுஷ்ய:** = மனிதன்; **ஸுரவரமுனிபூஜ்யம்** = தேவர்களாலும் முனிவர்களாலும் பூஜிக்கத் தக்கதும்; **ஸ்வர்க$^{3}$-மோக்ஷைக-ஹேதும்** = ஸ்வர்க்க மோக்ஷங்களுக்குக் காரணமானதும்; **அமோக$^{4}$ம்** = பயன் தரக் கூடியதும்; **புஷ்பத$^{3}$ந்தப்ரணீதம்** = புஷ்பதந்தன் செய்ததுமான; **இத$^{3}$ம்** = இந்த; **ஸ்தவனம்** = ஸ்தோத்திரத்தை; **பட$^{2}$தி யதி$^{3}$** = பாராயணம் செய்வானேயானால்; **கின்னரை:** = கின்னரர்களால்; **ஸ்தூயமான:** = துதிக்கப்பட்டவனாகக் கொண்டு; **ஶிவ ஸமீபம்** = சிவஸமீபதேசத்தை; **வ்ரஜதி** = அடைவான்.

**கருத்துரை:** - மிக உத்தமமான இந்த ஸ்தோத்திரத்தை ஏகாக்ரமனத்துடன் பாராயணம் செய்யும் பக்தன் சிவஸாமீப்யமென்னும் தயை இந்த முக்தியைப் பெறுவான்.

**आसमाप्तमिदं स्तोत्रं पुण्यं गन्धर्व-भाषितम् ।**
**अनौपम्यं मनोहारि सर्वमीश्वरवर्णनम् ॥ ३९॥**

**ஆஸமாப்தமித$^{3}$ம் ஸ்தோத்ரம் புண்யம் க$^{3}$ந்த$^{4}$ர்வ பா$^{4}$ஷிதம் ।**
**அநௌபம்யம் மனோஹாரி ஸர்வமீஶ்வரவர்ணனம் ॥ 39 ॥**

**பதவுரை:** - **புண்யம்** = புண்யத்தை அளிப்பதும்; **அநௌபம்யம்** = உவமையற்றதும்; **மனோஹாரி** = மனசை அபஹரிப்பதும்; **ஶிவம்** = மங்களமானதும், **ஈஶ்வர வர்ணனம்** = பரமேச்வரனது வர்ணனை வடிவமானதும்; **க$^{3}$ந்த$^{4}$ர்வ பா$^{4}$ஷிதம்** = புஷ்பதந்தாசார்யர் சொன்னதுமான, **இத$^{3}$ம்** = இந்த ஸ்தோத்திரம்; **ஆஸமாப்தம்** = முடிவுற்றது.

**கருத்துரை:** - பாவனமானதும், உவமைற்றதும் மனோஹரமானதும், மங்கள மானதும், பரமேச்வர குண மஹிமையை வர்ணிப்பதும் ஆன இந்த புஷ்பதந்தர் எழுதிய மஹிம்ந ஸ்தோத்திரம் முற்றிற்று.

புஷ்பதந்தனால் இயற்றப்பட்ட சிவமஹிம்ன ஸ்தோத்ரம் ஸம்பூர்ணம்.

**इत्येषा वाङ्मयी पूजा श्रीमच्छङ्कर-पादयोः ।**
**अर्पिता तेन देवेशः प्रीयतां मे सदाशिवः ॥ ४०॥**

**இத்யேஷா வாங்மயீ பூஜா ஸ்ரீமத்ச$^2$ங்கர-பாத$^3$யோ: |**
**அர்பிதா தேன தே$^3$வேஶ: ப்ரீயதாம் மே ஸதா$^3$ஶிவ: || 40 ||**

**பதவுரை: - இதி** = இவ்வாறு; **வாங்மயி** = சொற்களுடைய; **யேஷா பூஜா** = இத்துதி; **ஸ்ரீமத்** = அருள் வடிவான; **ச$^2$ங்கர பாத$^3$யோ:** = சங்கரரின் திருவடிகளில்; **அர்பிதா** = படைக்கப்படுகிறது; **தேன** = இதன் மூலம்; **தேவேஸ** = தெய்வங்களுக்கெல்லாம் தெய்வமாகிய; **ஸதா$^3$ஶிவ** = சதாசிவம்; **மே** = என்னிடம்; **ப்ரீயதாம்** = மகிழ்ச்சி அடையட்டும்.

**கருத்துரை: -** முதற்பாடலில் புஷ்பதந்தர், இறைவனை, அடியார்களின் மும்மலங்களையும் கவரும் திருடனே (ஹரனே) என அழைத்தார். மும்மலங்கலில் முக்கியமானது, ஆணவ மலம் என்பது. அதுவே “நான் யார்” என்பதை அறியாமல், உடலையும் மனதையும் ‘தான்’ என கற்பித்து இருக்கும் செருக்கு. அதனையே “ஜீவ பாவம்” என வேதாந்தம் அழைக்கிறது. அறியாமை தான் அதற்கான வித்து.

பகவான் ஆதிசங்கரர், அறியாமை என்பதை ‘எவரிடத்தில் தான் ஆத்மா என்ற நுண்ணுர்வு இல்லையோ, அவரிடத்தில் இருக்கும் அறிவுக்குத்தான் அறியாமை என்பது பெயர்’ எனச் சொல்கிறார். அதாவது, மாறாது இருக்கும் “ஆத்மாவே நான்” என்பதை உணராதவர், எத்தனை படித்திருந்தாலும், அவருக்கு வேத சாத்திரங்களில் பெரிய அறிவு இருந்தாலும் கூட, அந்த அறிவெல்லாம் அறியாமை தான். ஏனெனில், அவற்றால் பேருண்மையை உணர முடியாது. மாறிக்கொண்டே இருக்கும் உலகில் நாம் மன்றாடிக் கொண்டே இருக்கச் செய்கின்ற வழிகளைத்தான் அவை தந்து கொண்டிருக்கும். எப்போது, ஒருவருக்குள், “நான் மாறாது ஒளிரும் ஆத்மா” என உணர்ந்து அவ்வுணர்விலே நிலைக்க முடிகிறதோ, அப்போதே ‘ஜீவ பாவம்’ அகன்று, ‘ஆத்ம போதம்’ எனும் மெய்யறிவு அவருள் ஒளிரத் தொடங்கிவிடும். அந்த ஒளிவெள்ளத்தில் “தொடக்கம்” என இல்லாது நம்முள்ளே பலகாலமாய்த் தொடர்ந்து வந்த அறியாமை, அக்கணத்திலே முடிந்துவிடும்.

ஆனால் நம்மால் ஆணவமலத்தை அவ்வளவு எளிதாகக் கைவிட முடிவதில்லை! வேதாந்த நெறிகளை எல்லாம் நன்றாகப் படித்திருந்தாலும் உடல், மனம், அறிவு என நாம் சுமந்து கொண்டிருப்பன எல்லாவற்றையும் “நான் அல்ல” எனத் தள்ளி,. நம்முள நம்மை உணர்ந்து அதிலேயே நிலைக்கின்ற தீரச்செயலுக்கு நாம் எளிதில் துணிவது கிடையாது. அதற்கு ஆணவமலம் முக்கியக் காரணம்.

எனவேதான் கருணையினால் பரசிவன் நம்மிடமிருந்து, நமது ஆணவத்தை நாம் அறியாமலேயே திருடிச் சென்று விடுகிறார். அந்த நல்ல திருட்டு நடைபெறுவதற்கு, நம்முடைய இதயத்தைத் திறந்து வைக்க வேண்டும். அதிலே இறைச் சிந்தனையை ஏற்றி வைக்க வேண்டும். பக்தியும் ஈடுபாடும் கொண்டு, இறைவனைச் சரணடைவது மட்டுமே நமது நல்வழியாக வேண்டும்.

இப்பாடலில், ஆசிரியர் இறைவனை எல்லா நலனையும் தருகின்ற "சங்கரர்" என அழைக்கிறார். அடியேனுக்கு, புஷ்பந்தரின் இப்பணிவு, அவர் தனது படைப்பை, ஜகத்குருவாகிய பகவான் ஆதி சங்கரரின் திருவடிகளுக்குப் படைப்பதாகவே காட்டுகிறது. காரிருள் கிழித்த கதிரவனாக வந்து, பரமாத்ம தத்துவத்தைப் பாரெங்கும் மீண்டும் பதித்த ஞான குரு அல்லவா ஆதி சங்கரர்! அவர் பரசிவக் கருணையல்லவா! குருவின் அருளால், நமது எல்லாத் தீவினைகளும், ஆத்ம ஞானம் எனும் தீயினால் அழிக்கப்பட்டு, அதன் விளைவாக, எப்போதும் மாறாத, "ஸதாசிவம்" என இருந்து ஒளிரும் இன்பமாக (சத்-சித்-சுகம்) அப்பேருண்மை நமக்குள்ளே பிரகாசிக்கட்டும்! அப்பேரொளியில் நாம் கலந்து இருந்தால், அதுவே "ஜீவன் முக்தர்" எனும் முற்றும் விடுதலை அடைந்தவரான உயர்நிலை. இவ்வுலகில் இருக்கும் போதே, இப்போதே நம்மால் உய்ய முடிகின்ற பெருநிலை!

**तव तत्त्वं न जानामि कीदृशोऽसि महेश्वर ।**
**यादृशोऽसि महादेव तादृशाय नमो नमः ॥ ४१॥**

**தவ தத்வம் ந ஜானாமி கீத்³ருஶோ(அ)ஸி மஹேஶ்வர ।**
**யாத்³ருஶோ(அ)ஸி மஹாதே³வ தாத்³ருஶாய நமோ நம: ॥ 41 ॥**

**பதவுரை: - மஹேஶ்வர** = பேரிறைவா; **தவ** = தங்கள்; **தத்-த்வம்** = மெய்த்தன்மை; **கீத்³ருஶோ அஸி** = எப்படிப்பட்டதாக இருக்கிறது; **ந ஜானாமி** = யான் அறிகிலேன்; **யாத்³ருஶோ அஸி** = எப்படியாகவெல்லாம் தாங்கள் இருந்தாலும்; **மஹாதே³வ** = பெருமானே; **தாத்³ருஶாய** = அந்த உண்மைக்கே; **என்** = மீண்டும் மீண்டும்; **நமோ நம:** = பணிவுகள்.

**கருத்துரை: -** பரசிவத்தை எப்படி முழுமையாக உணர்ந்து, சரியாகப் புகழமுடியும்? வேதங்களும் கூட இறைவனை மனதாலும், மொழியாலும் அறியப்பட முடியாத பொருளாக அல்லவா காட்டி இருக்கின்றன! அதனால், அப்படியான ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு என்னால் முடிவினைக் காண முடியாது என்பதால், "தாங்கள் எப்படி எல்லாம் இருந்தாலும், என் அறிவின் முதிர்ச்சிக்கு ஏற்ப, நான் உங்களை விடாமல் பணிவடைந்து, போற்றிக் கொண்டே இருப்பேன்" என ஆசிரியர் புகழ்கிறார்.

**एककालं द्विकालं वा त्रिकालं यः पठेन्नरः ।**
**सर्वपाप-विनिर्मुक्तः शिव लोके महीयते ॥ ४२॥**

**ஏககாலம் த்[3]விகாலம் வா த்ரிகாலம் ய: படே[2]ன்னர: ।**
**ஸர்வபாப-வினிர்முக்த: ஶிவ லோகே மஹீயதே ॥ 42 ॥**

**பதவுரை: - ஏககாலம்** = ஒருமுறை; **த்[3]விகாலம்** = இருமுறை; **வா** = மற்றும்; **த்ரிகாலம்** = மூன்று முறை; **ய படே[2]ன்னர:** = எந்த மனிதர் படிக்கிறாரோ; **ஸர்வபாப** = அவர் எல்லாப் பாவங்களிலிருந்தும்; **வினிர்முக்த:** = விடுதலை அடைந்தவராக; **ஶிவ லோகே** = சிவனுலகில் சேர்ந்து, அதாவது ஆத்ம ஞானத்தில் நிலைத்தவராக; **மஹீயதே** = பெரும் சிறப்படைகிறார்.

**கருத்துரை: -** ஒருமுறை, இருமுறை, மும்முறை என்பதை காலை, பகல், இரவு என நாள் முழுவதுமாக நாம் கொள்ளலாம். ஒழுக்கத்திற்காக, இப்படி மூன்று காலங்களிலும் இறைவனைத் துதிப்பது நலம் எனப் பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள். எக்காலத்திலும் நாம் நமது மனதை இறைவனிடத்திலேயே வைத்திருக்க வேண்டும் என்பதே அதன் குறிக்கோள். மனதில் எப்போதும் இறைச் சிந்தனையே இருக்கும்படி நாம் செய்துவிட்டால், (அடுத்த நொடியில் மனம் என்ன நினைக்கும் என்பதையும் தெரியாமல், மனதிற்கே கட்டுப்படுத்துகின்ற அதிகாரிகளாகி விடுகிறோம் அல்லவா! அப்படிப்பட்ட மனச்சீர்மைக்காகவே இறைவனது திருநாமங்களை மனதில் எப்போதும் விளைத்துக் கொண்டிருக்கும் தவத்தினை நமக்குச் சாத்திரங்கள் காட்டுகின்றன! மனச்சீர்மையினால் ஆசை, பயம், கோபம் முதலான தூண்டுதல்கள் எதுவும் இல்லாமல், அதனால் பழிச்செயல்களும், பாவங்களும் அற்றவர்களாக, பரசிவமாகிய புனிதத்தைச் சுமந்தவர்களாகவே நாம் ஆகிவிடலாம். இதுவே இப்பாடலின் கரு.

**श्री पुष्पदन्त-मुख-पङ्कज-निर्गतेन**
**स्तोत्रेण किल्बिष-हरेण हर-प्रियेण ।**
**कण्ठस्थितेन पठितेन समाहितेन**
**सुप्रीणितो भवति भूतपतिर्महेशः ॥ ४३॥**

**ஶ்ரீ புஷ்பத[3]ந்த-முக[2]-பங்கஜ-நிர்க[3]தேன**
**ஸ்தோத்ரேண கில்பி[3]ஷ-ஹரேண ஹர-ப்ரியேண ।**
**கண்ட[2]ஸ்தி[2]தேன படி[2]தேன ஸமாஹிதேன**
**ஸுப்ரீணிதோ ப4வதி பூ[4]தபதிர்மஹேஶ: ॥ 43 ॥**

**பதவுரை: - ஶ்ரீ புஷ்பத[3]ந்த** = அருள்மிகு புஷ்பதந்தரின்; **முக[2]-பங்கஜ** = தாமரை வாயிலிருந்து; **நிர்க[3]தேன** = வெளிப்பட்ட; **ஸ்தோத்ரேண** = இத்துதியினை; **கண்ட[2]ஸ்தி[2]தேன** = (அதை) மனப்பாடம் செய்தாலும்; **படி[2]தேன** = படித்தாலும்;

**ஸமாஹிதேன** = கேட்டாலும்; **கில்பி³ஷ-ஹரேண** = பாவங்களைக் களைபவரும்; **ஹர:** = (மும்மலங்களையும்) அழிப்பவரும்; **பூ⁴தபதி**: = எல்லாவற்றுக்கும் தலைவனும்; **மஹேஶ:** = தெய்வத்தின் தெய்வமும்; **ப்ரியேண** = ஆகிய அன்புக்குரிய சிவன்; **ஸுப்ரீணிதோ ப⁴வதி** = மிகுந்த மகிழ்ச்சியை அடைகிறார்.

**கருத்துரை: -** இறுதியாக, எவர் இத்துதியினைப் படித்தும், கேட்டும், மனதில் இறைவனின் பெருமையை எப்போதும் தம்முள்ளேயே உணர்ந்து இருக்கிறாரோ, அவரிடத்தில் இறைவன் எப்போதும் மிகுந்த மகிழ்ச்சியாக இருக்கிறார் எனவும், அம்மகிழ்ச்சி எப்படி வெளிப்படுகிறது என்றால், ஆசை, துயரம், குழப்பம் (ராகம், ஷோகம், மோஹம்) எல்லாவற்றுக்கும் காரணமான அறியாமை எரிக்கப்பட்டு, அந்த அடியாரின் உள்ளத்தில் ஆத்மாவின் ஒளி நிறைந்து, அவருக்குள் புனிதராாக, தூயவராக, முற்றும் உணர்ந்த ஞானியாக உலகுக்கு வெளிச்சம் இட்டுக் காட்டுகின்றது எனவும் இப்பாடல் உறுதி அளிக்கின்றது.

**॥ इति श्री पुष्पदन्त विरचितं शिवमहिम्नः**
**स्तोत्रं समाप्तम् ॥**

இவ்விதம் ஸ்ரீ புஷ்பதந்தர் அருளிய
சிவ மஹிமை தோத்திரம் நிறைவடைகிறது.

---